அன்னை வேளாங்கண்ணி

# அவள் ஒரு பச்சைக்குழந்தை

கதை, வசனம், டைரக்ஷன்

S.C.சேகர்

வெளியீடு!



# வான்கோழி

1/2/79
Allahabad



## கலைஞர் கருணாநிதி




மேகலா மாத இதழ்

# வான்கோழி

## கலைஞர் கருணாநிதி

ஒருவன் ஒருத்தியைக் காதலிக்கிறான், அவளோ அவனை விடுத்து வேறொருவனைத் தழுவிடத் துடிக்கிறாள். இதனை இருவரிக் கவிதையொன்றில் சுவைபட எழுதுவோர்க்குப் பரிசளிப்பும் பாராட்டும் நடைபெறுமென கவிஞர் மன்றத்தினர் அறிவித்திருந்தனர்.

அனைத்தையும் ஆய்வு செய்து பரிசுக்குரிய கவிதையைத் தேர்ந்தெடுக்க மூன்று கவிஞர்களை நடுவராகக் கொண்ட ஒரு குழுவையும் அமைத்திருந்தனர். ஒவ்வொரு நாளும் கவிஞர் மன்றத்துக்கு வரும் அஞ்சல்பை பத்து மாதக் கர்ப்பிணி போல வரத் தொடங்கியது. அந்த அளவுக்கு எண்ணற்ற கவிதைகள் பரிசுப் போட்டிக்காக வந்து குவிந்த வண்ணமிருந்தன.

நடுவர் குழுவினர் ஏழு நாட்கள், கவிதைகள் அனைத்தையும் வடிகட்டி இறுதியாக ''இந்த ஆண்டு, பரிசு பெறும் கவிதை இன்பசாகரனுடையது'' எனத் தேர்ந்தெடுத்து, கவிஞர் மன்றத்துத் தலைவருக்கு அறிவித்தனர்.

பரிசு பெற்ற இன்பசாகரனைப் பாராட்ட மன்றத்தினர் விழா ஒன்று ஏற்பாடு செய்தனர். விழா மண்டபத்தில் பெருங்கூட்டம். தலைவர், கவிஞர் மன்றத்தில்

இலக்கியத் தொண்டு எத்தகைய முறையில் நடைபெற்று வருகிறது என்பதை விளக்கி உரையாற்றினர்... தமிழ்ப் புலவர்கள், கவியெழுதும் திறனுடையோர் மண்டபத்து முன் வரிசையில் அமர்ந்து விழா நிகழ்ச்சிகளைக் கவனித்தனர். ஒரு பகுதியில் மங்கையர் கூட்டமும் இடம் பெற்றிருந்தது. "கவிதைப் போட்டியில் வெற்றிபெற்ற இன்பசாகரனை அறிமுகப் படுத்தப்போகிறேன்," என்று தலைவர் அறிவித்ததும் அனைவரின் விழிகளும் மேடையை மொய்த்தன. மங்கையர் கூட்டத்தின் பார்வையும் இன்பசாகரன் யார் என்று கண்டறிவதில் அக்கறை கொண்டிருந்தது எனினும்—கண்ணம்மா எனும் இளமங்கையின் ஆர்வம் மட்டும் அனைத்துக்கும் சிகரம் வைத்ததுபோல் இருந்தது.

கண்ணம்மா — அவள் பிறந்த பொழுதே அவளுக்கு அவள் பெற்றோர் காரணப் பெயர் இட்டனர் போலும். கவர்ந்திழுக்கும் கண்கள் அவளுடையது. யார் அவளைப் பார்த்தாலும் முதலில் தெரிவது அவள் கண்ணொளிதான். முகம் முதலியவற்றை நோக்குவதற்கு இடம் தராமல் ஆண்களைத் தடுத்துவிடக் கூடிய காந்த சக்தி அந்தக் கண்களுக்கு இருந்தது. அவளது கல்லூரித் தோழிகள் கூட அவளிடம், மனத்தில் உள்ள பொறுமையை மறைத்துக் கொண்டு கேலியாகக் கூறுவதுண்டு: இந்த அழகான கண்களில் தன் கனியிதழ்களை மெல்லப் பதித்து முத்தமிடப் போகிற கட்டிளங்காளை யாராக இருப்பானோ என்று! அந்தக் கேலிப் பேச்சு கேட்டு அவள் கண்ணின் மணி உருள்வது கூட, மல்லிகைப் பூ மீது வண்டு நடனமிடுவது போல் அவ்வளவு அழகாக இருக்கும்.

தங்க நிறம் என்று சொல்ல முடியா விட்டாலும் அசல் கறுப்புத் தங்கம் என்று கூறிவிட முடியாது. கறுப்புக்கும் சிவப்புக்கும் இடைப்பட்ட ஒரு நிறமுடையவள் ... பரணி பாடிய சயங்கொண்டார் வர்ணிப்பது போல கதலியைத் தொடையாகவும், கமுகினைக் கழுத்தாகவும், குமிழம்பூவை மூக்காகவும், குமுதத்தை வாயிதழாகவும், கயலைக் கண்ணாகவும் பெற்று இளநீர் இரண்டசையத் தோன்றும் அவள் சாந்தமாகத்

தெரிந்திடினும் காண்போர் கவரும் காந்தக் கல்லாகவே விளங்கினாள்.

சயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணியின் பெண்கள் வர்ணனையைக் கண்ணம்மாவுடன் ஒப்பிடுவதற்கு மற்றொரு அடிப்படையும் உண்டு. அவள் இலக்கியம் படிப்பவள். கவிதை, காவியம், ஓவியம், இவற்றில் இதயத்தைப் பறி கொடுத்தவள். அந்த ஆர்வம்தான் அவளை கவிஞர் மன்ற விழாவுக்கு ஓடிவரச் செய்தது.

பலத்த கரவொலிக்கிடையே இன்பசாகரன் மேடையில் தோன்றினான். அவனைப் பார்த்தவுடன் கண்ணமாவுக்கு, தான் படித்த பாரதிதாசன் பாட்டுத் தான் நினைவுக்கு வந்தது.

"சோதி நிலாவுக்கும் மாசுண்டாம் — இச்
சுந்தரனோ கறை ஒன்றிலான்"

சிவந்த மேனி — நடுத்தர உயரம் — வாரிவிட்ட தலைமுடி — முகத்தில் புன்முறுவல் — சரிகைக்கரை போட்ட பட்டு வேட்டி — பட்டுச்சட்டை — தோளில் ஒரு சந்தன வண்ணச் சால்வை.

கண்ணம்மாவுக்குப் பின்னாலிருந்து இரண்டு பெண்கள் மெல்லிய குரலில் பேசிக் கொண்டது கண்ணம்மாவின் காதில் விழாமல் இல்லை "ஆளைப் பாத்தியா! ஆம்பளைக்கு ஆம்பளை ஆசைப்படுறாப்ல - இருக்கான்! உம் — இவனை அடைய எவள் கொடுத்து வச்சிருக்கிறாளோ?".

கண்ணம்மாவின் உள்ளத்தில் அவளாலேயே புரிந்து கொள்ள முடியாத ஒரு புதிய உணர்வை பின் வரிசையில் அமர்ந்திருந்தவர்களின் விமர்சனம் உசுப்பி விட்டது. மெல்லிய குரல் மெல்லியலார் அத்துடன் நிறுத்தவில்லை.

"இந்த சிகப்பு உடம்புக்கும் வசீகரமான முகத்துக்கும் பெண் வேஷம் போட்டா கூட இப்ப இருக்கிற எந்த கதாநாயகிகளும் முன்னால நிக்க முடியாது."

"ஆமாம் சரியாச் சொன்னே! முகத்தில மீசை கூட இல்லை! அரும்பு மீசை மாத்திரம் இருந்திட்டா அசல் அர்ச்சுனன் தான்!"

"மீசையிருந்த அர்ச்சுனனை விட மீசையில்லாத கிருஷ்ணனைத்தாண்டி ஆயிரம் ஆயிரமாக கோபிகாஸ்த்ரீகள் சுத்தி வந்தாங்க!''

''அதோட போச்சா! கல்யாணமான ராதை கூட கணவனை விட்டுவிட்டு கண்ணனோட தானே திரிஞ்சு கிட்டு இருந்தா...''

''கண்ணன் கருப்பாச்சே ... இவன், எலுமிச்சம் பழம் மாதிரியில்ல இருக்கான்!''

''ஏய், எலுமிச்சம் பழம்னு சொல்லாதே! என் பழக்கம், உடனே வாய் ஊற ஆரம்பிச்சுவிடும்!''

கண்ணம்மாவுக்கு ஒரு பெருமிதம். தனது மனத்தில் என்னென்ன அலைகள் எழுந்தனவோ, அத்தனையும் உரையாடல்களாக பின்னால் இருந்த பெண்கள் வாயிலாக வ வம் பெறுகின்றன என்பது தான் அந்தப் பெருமிதத்திற்குக் காரணமாகும்.

''இப்போது, இன்பசாகரனின் பரிசு பெற்ற கவிதையை உங்கள் முன்னால் படித்துக் காட்டுகிறேன்'' என்று மன்றத் தலைவர் கூறியதும்—மீண்டும் கையொலி! கண்களை மட்டுமன்றி காதுகளையும் மேடைக்குத் திருப்பி விட்டுக் கொண்டனர் மண்டபத்தில் இருந்தவர்கள்.

''தென்றலோ, காதலால் பூமீது மோதும்;
பூவோ தன்மீது சாய வண்டொன்றைத் தேடும்''

தென்றல் பூவைக் காதலிக்கிறது. பூவோ வண்டைக் காதலிக்கிறது. ஒருத்தியை ஒருவன் காதலித்தான். அவளோ வேறொருவனைத் தழுவிட விரும்பினாள், என்ற கருத்துக்கு எவ்வளவு பொருத்தமும், எளிமையும் கொண்ட கவிதையென அந்த அவையே பாராட்டி ''இன்பசாகரன் வாழ்க'' என ஒலி முழக்கியது. மன்றத் தலைவர் இன்பசாகரனுக்குப் பொன்னாடை போர்த்தி வெள்ளியால் செய்யப்பட்ட ஆடும் மயில் ஒன்றை பரிசுப் பொருளாக வழங்கினார். அதனைப் பெற்றுக்கொண்ட இன்பசாகரன் ஒலிபெருக்கியின் முன்னால் வந்து நின்று நன்றி கூறத் தொடங்கினான்.

"கவிதை எனக்குத் தொழில் அல்ல. பரிசு பெற வேண்டுமென்பதும் என் நோக்கமல்ல. போட்டியில் வெற்றி பெற வேண்டுமென்பதே என் ஆசை. கவிஞர் மன்றத்தின் அறிவிப்பைக் கண்டதும், என் வீட்டுத் தோட்டத்தில் அமர்ந்து சிந்தித்தேன். சிந்திக்க அதிக நேரம்கூட எடுத்துக்கொள்ளவில்லை. தோட்டத்தில் வீசிய தென்றல் காற்று கொடிகளை அசைத்து பூக்களைத் தொட்டது. ஆனால், அந்தப் பூக்களை வண்டுகள் சுவை பார்த்துக்கொண்டிருந்தன. அந்தக் காட்சியைக் கண்டதும் — கவிதை பிறந்துவிட்டது. இதனை மன்றத்து நடுவர்கள் தேர்ந்தெடுத்து என்னை சிறப்பித்தமைக்காக நான் அவர்களுக்கு நன்றி சொல்வதைவிட என் மனதில் எழுந்த கற்பனைக்கும், அந்தக் கற்பனைக்குக் காரணமான தென்றலுக்கும், தென்றல் வீசிய என் வீட்டுத் தோட்டத்துக்கும், தோட்டத்தில் மலர்ந்துள்ள பூக்களுக்கும், அந்தப் பூக்களில் மொய்த்த வண்டுகளுக்கும் நன்றி கூறுவதே பொருத்தமாக இருக்கும்".

—இன்பசாகரனின் இந்த உரை கேட்டு அவையினர் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். தென்றல், வண்டு, பூ, என்பனவெல்லாம் வழக்கமாகக் கவிதைகளில் வருகின்ற வார்த்தைகள்தான் என்றாலும் — ஒருவனால் காதலிக்கப்படுகிற ஒருத்தி, இன்னொருவனைக் காதலித்துக் கிடக்கிறாள் என்பதற்கு எளிய நடையில் புரியும் வகையில் உவமை கையாளப்பட்டிருப்பதை வியந்தவண்ணம் கூட்டத்தினர் கலைந்தனர்; கண்ணம்மா மட்டும் வைத்த விழியைத் திரும்ப எடுக்க முடியாமல் தவித்துத் தடுமாறிக்கொண்டிருந்தாள். இன்பசாகரன், அவனது காரில் போய் ஏறுகிற வரையில் கூட்டத்தினர் அவனைக் கைகுலுக்கி ஒவ்வொருவராகப் பாராட்டுகள் தெரிவித்துக் கொண்டே அவனைச் சூழ்ந்திருந்தனர். அந்தக் கூட்டத்தையும் அம்புபோல் ஊடுருவிக் கொண்டு கண்ணம்மாவின் பார்வை இன்பசாகரன் மீது விழுந்து கொண்டிருந்தது. அவளும் காரின் பக்கம் அவனையுமறியாமல் நடந்து வந்தாள். மன்றத் தலைவர், இன்பசாகரனுக்கு வணக்கம் கூறி, காரில் ஏற்றிவிட முன்வந்தார்.

ஒரு கறுத்த உருவம், ஏறத்தாழ இன்பசாகரனின் உயரம். உடல் அமைப்பெல்லாம் கூட இன்ப

சாகரனைப் போலத்தான்; ஆனால் விகாரமான முகம்; அந்த முகத்திலே நெற்றியில் புடைத்திருந்த ஒரு உருண்டை. இன்பசாகரன் வீட்டு வேலைக்காரன்தான் அவன் என்பது, மன்றத் தலைவரும், நிர்வாகிகளும் எடுத்து வந்த பரிசுப் பொருளையும், பொன்னாடைச் மாலை முதலியவற்றையும் வாங்கிக் காருக்குள் வைத்ததி லிருந்து தெரிந்தது.

"டிரைவர்! காரை எடு!" என்று கூறி இன்ப சாகரன், காரின் பின்புறத்து இருக்கையில் அமர்ந்து கொண்டான்.

"கறுப்பா! ஏறிக்கொள் சீக்கிரம்" என்ற இன்பசாகரன் குரல் கேட்டு அவனும் "சரிங்க எஜமான்!" என்று பணிந்து குனிந்து பதில் அளித்து விட்டு பொன்னாடை, மாலை, வெள்ளி மயில், அனைத் தையும் மார்புடன் அணைத்தவாறு முன்பக்கத்து இருக் கையில் உட்கார்ந்து கொண்டான்.

கார் புறப்பட்டு விட்டது, வாழ்த்தொலியுடன்! பின்னர் கார் அந்த சுற்றடைப்பை விட்டுப் பறந்தே விட்டது.

அதுவரையில் கண்ணம்மாவின் விழியை விட்டுப் பிரிந்திருந்த 'பார்வை' இப்போதுதான் விழிக்குள் வந்து ஒரு ஏக்கப் பெருமூச்சுடன் உட்கார்ந்து கொண்டது.

ன்பசாகரன் ஏறிக் கொண்ட கார், ஒரு எடுப்பான தோற்றமுள்ள மாடிக் கட்டிடத்தின் முன்னால் வந்து நின்றது. அதுதான் அவனது வீடு. வீட்டு முகப்பில் "மதன விலாஸ்" என்ற எழுத்துக்கள் மின்னிக் கொண்டிருந்தன. காரிலிருந்து இறங்கியதும் கறுப்பன் கையிலிருந்த வெள்ளி மயிலைத் தன்கையில் வாங்கிக் கொண்டான் இன்பசாகரன்.

அவன் கார் வந்து நின்ற அடுத்த விநாடியே ஒரு டாக்சியில் நான்கு பேர் வந்து இறங்கி, "ஹலோ

இன்பசாகரன். காங்கிராஜுலேஷன்ஸ்! எங்கள் வாழ்த்துக்கள்'' என்றவாறு அவன் கரத்தைக் குலுக்கினர்.

''பாலு, ராமு, வேணு, விவேக், நீங்ககூட விழாவுக்கு வந்திருந்தீங்களா?'' என்று மகிழ்ச்சி பொங்கக் கேட்டான் இன்பசாகரன்.

''என்னப்பா! மூன்றுவது வரிசையிலேதான் எங்களுக்கு இடம் கிடைச்சுது! நிகழ்ச்சி முடிந்தவுடனே உன்னை சந்திக்க முயற்சி பண்ணினேம். உன்னை ஒரு கூட்டமே சூழ்ந்து கொண்டது. சரி, ஆளை வீட்டிலே போயே பார்த்துடலாம்னு டாக்சியிலே ஏறி பின் தொடர்ந்தோம்'' என்று அவனது நண்பர்கள் தங்களின் பூரிப்பை வெளிப்படுத்திக் கொண்டனர்.

அதற்குள்ளாக இன்பசாகரனின் தந்தை அரியநாயகமும், அன்னை காமாட்சியும் — மகனை எதிர் கொண்டழைக்க வாயிற்படிக்கே வந்து விட்டனர்.

காமாட்சியின் கையில் ஆரத்தித் தட்டு! மகனுக்குச் சுற்றி, நெற்றியில் திலகமும் இட்டாள். வெள்ளியில் பரிசினைத் தந்தையின் கையில் கொடுத்து, அவரது காலைத் தொட்டு வணங்கி, அவ்வாறே காமாட்சியின் காலையும் தொட்டு வணங்கினன்.

''கறுப்பா? எங்க எல்லோருக்கும் ஒரு நொடியிலே தேநீர் விருந்து தயார் பண்ணு போ!'' என்று ஆணையிட்டு விட்டு, நண்பர்களைக் கட்டித் தழுவி அழைத்துக் கொண்டு உள்ளே சென்றான். அதற்குள் விவேக் என்ற நண்பன், ''வெளியில் டாக்சி காத்திருக்குதப்பா! நீ கொடுக்கிற தேநீர் விருந்தைவிட டாக்சி வாடகை அதிகமாயிடப் போவுது!'' என்றான் சிரித்துக் கொண்டே!

உடனே சற்றும் யோசிக்கக்கூட இடமின்றி, இன்பசாகரன், ஒரு ஐந்து ரூபாய் நோட்டை எடுத்துக் கறுப்பன் கையில் கொடுத்து, ''ஏய்! டாக்சி வாடகை கொடுத்துட்டு வா!'' என்று அவனை விரட்டினான்.

''அஞ்சு ரூபா இருக்காதுப்பா! கறுப்பன் கை விரல் எவ்வளவோ அவ்வளவு தான் இருக்கும்'' என்று

பாலு, கெக்கலிப்புக் கொட்டினான். கறுப்பன் தன் கையை ஒருமுறை பார்த்துக் கொண்டான். பிறகு பாலுவைப் பார்த்து ''சாமீ! எனக்கு ரெண்டு கையிலும் எட்டு விரலாச்சே! அப்படின்னா மிச்சம் மூணு ரூபாய்க்கு எங்க போறது?'' எனக் கொஞ்சம் எரிச்சலாகவே கேட்டான்.

கறுப்பனின் முகம் ஏற்கனவே விகாரம்! அதிலும் எரிச்சல் அந்த முகத்தில் எதிரொளித்தால் எப்படியிருக்கும்? பாவம், கறுப்பனுக்கு ஒவ்வொரு கையிலும் நாலு விரல்கள் தான்! சுண்டு விரல்கள் இருக்க வேண்டிய இடத்தில் முழு விரல்களுக்குப் பதிலாக ஏதோ மொச்சைக்கொட்டை போல சிறிது சதை துருத்திக் கொண்டிருக்கும்.

கறுப்பன் எரிச்சலடைவதைக் கண்ட இன்ப சாகரன், அவனைச் சமாதானப்படுத்தும் முறையில் ''ஏதோ தமாஷா சொல்றாங்க! அதையெல்லாம் பெரிசா எடுத்துக்காதே! போய் வேலையைப்பாரு!'' என்று அவன் முதுகில் தட்டிக் கொடுத்தான்.

இன்பசாகரன், அரியநாயகம், மற்றும் இன்ப சாகரனின் நண்பர்கள் கூடத்தில் உள்ள சோபாக்களில் அமர்ந்து கொண்டார்கள். காமாட்சி தன் மகனுக்குக் கிடைத்த பெருமையை எண்ணியவாறு கறுப்பனின் துணையோடு தேநீர் விருந்துக்கான முயற்சிகளில் ஈடு பட்டாள்.

அரியநாயகம், கறுப்பன் சின்னஞ்சிறு பிராயத் திலிருந்து வீட்டில் வளர்ந்த பிள்ளை யென்றும் அதிலும் இன்பசாகரனும் அவனும், எஜமான் —வேலைக்காரன் என்று பழகாமல் அவ்வளவு அன்னியோன்னியமாகப் பழகியவர்கள் என்றும், இப்படி ஒரு விசுவாசமுள்ள வேலைக்காரன் வேறு யார் வீட்டுக்கும் கிடைக்க மாட்டான் என்றும் கறுப்பனைப் பற்றி தன்னு பாராட்டுரைகளைப் பொழியத் தொடங்கினார்.

கறுப்பனைப் பற்றியே சிறிது நேரம் உரையாடல் தொடர்ந்தது.

''ஆமாம்! இந்தக் கறுப்பன் ஆள் வாட்ட சாட்ட மாக ஒழுங்கான உடலமைப்போடு நம்மைப் போலத்தான் இருக்கிறான். ஆனால் நெற்றியில் ஒரு உருண்டையும்,

கைகளில் நான்கு விரல்களும் இவனுக்கு பிறப்பிலேயே ஏற்பட்டதா? அல்லது பிறகு ஏதாவது ஆகிவிட்டதா?'' என்று ராமு, ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தான்.

அரியநாயகம் உடனே கறுப்பனின் வம்சாவளி பற்றி விவரமாகச் சொல்லத் தொடங்கிவிட்டார்.

''கறுப்பனுடைய தகப்பனார் வேலாண்டியும் எங்க வீட்டிலே தான் வேலே செஞ்சார். அந்த ஆளுக்கும் கறுப்பன் மாதிரியே நாலு விரல்கள் தான்! நெற்றியிலே சுண்டைக்காய் மாதிரி ஒரு உருண்டைதான்! வேலாண்டி யோட தகப்பன், அதாவது கறுப்பனோட தாத்தாவுக்கும் இதே மாதிரிதானும். சில குடும்பங்களிலே குழந்தைகள் இதுமாதிரி தொடர்ந்து பரம்பரை பரம்பரையாகப் பிறக் கிறது உண்டு'

அவ்வாறு அவர் விளக்கியது கேட்டு இன்பசாக ரனின் நண்பர்கள் குழாம் மிகுந்த வியப்புற்று தேநீர்த் தட்டுடன் வரும் கறுப்பனையே ஆவலுடனும் அனுதாபத் துடனும் பார்த்துக் கொண்டிருந்தது.

காமாட்சியம்மா, ஒரு தட்டில் மைசூர்பாகு, பஜ்ஜிகளையும், கறுப்பன் ஒரு தட்டில் தேநீர் கோப்பை களையும் எடுத்து வந்து அரியநாயகமும் மற்றவர்களும் அமர்ந்திருந்த இடத்தில் உள்ள வட்டமான மேஜையில் வைத்துப் பரிமாறத் தொடங்கினர்.

நண்பர்கள், பண்டங்களைச் சுவைத்தவாறு, இன்பசாகரனின் கவிதா ஆற்றலைப் புகழ்ந்துரைத்தனர்.

''ஏண்டா! இப்படி கவிதை எழுதுவேன்னு எங்ககிட்ட ஒருநாள் கூட சொல்லவில்லையே!'' இது வேணு வின் கேள்வி.

''ஏ, அப்பா! போன ஆண்டு கவிஞர் மன்றத் திலே கம்பனடியான் பரிசு பெற்றதாக ஒரு கவிதையைத் தேர்ந்தெடுத்து விழா நடத்தினார்களே; அந்த கவிதை யையெல்லாம் நம்ப இன்பசாகரன் கவிதை தூக்கி அடிச் சுட்டுது'' என்றான் பாலு.

இன்பசாகரன், வெற்றிப்புன்னகை புரிந்தவாறு, நண்பர்களை நோக்கி ஒரு குட்டிச் சொற்பொழிவே நிகழ்த்திவிட்டான்,

''கம்பனடியான் ஒரு நல்ல கவிஞர் என்பதை நான் இப்போதும் ஒத்துக்கொள்கிறவன் தான்! அவரது கவிதைகளைப் படிக்கும்போது நாமும் ஏன் ஒரு கவிஞராகக் கூடாது என்ற நினைப்புதான் எனக்கு எழுந்தது. அதையெல்லாம் விட அவர் கவிதைப் போட்டியில் பரிசு பெற்றதைக் கண்டதும், நாமும் அதே போட்டியில் பரிசு பெற்றாக வேண்டும் என்று சபதம் செய்து கொண்டேன். அதன் விளைவு தான் இது! கம்பனடியான் என்ன ஆகாயத்திலிருந்து குதித்து வந்து கவிஞராகிவிட்டாரா? அவரும் நான் வேலை பார்க்கிற அலுவலகத்திலே என்னைப் போல ஒரு பகுதிக்கு மானேஜர்! அவர் கவிதை எழுதும் போது நான் எழுதக்கூடாதா? எழுத முடியாதா?''

இப்படிப் பேசிக் கொண்டிருந்த இன்பசாகரனை இடைமறித்து விவேக் சொன்னான், ''அந்தக் கம்பனடியான், தொடர்ந்து கவிதைகள் எழுதுகிறார். அவை வார ஏடுகளில் கூட வருகின்றனவே'' என்பதாக!

''வாரா வாரம் ஏதாவது வருமானம் வரும் என்பதற்காக கவிதையென்ற பெயரால் கிறுக்கிக்கொண்டிருக்கிறார். கவிதை யென்பது கற்பனை ஊற்று! சிந்தனையின் விளைவு! மேகத்தைக் கண்டு மயிலாடுவதைப் போல இயற்கையில் இதயம் திளைக்கும்போது கவிதைகள் உள்ளத்தில் பெருக்கெடுக்கின்றன. அப்படிப் பிறந்த கவிதைதான் நான் இன்று பரிசு பெற்ற கவிதை!''

இன்பசாகரன், இப்படிப் பேசுவதை முழுவதுமாக சகித்துக் கொள்ள முடியாத நிலையில் விவேக் ஒருவன் தான் காணப்பட்டான். மற்ற நண்பர்களோ, சூடான தேநீரை அருந்துவதிலும், இன்பசாகரனின் பேச்சிலும் சுவையே கண்டனர்.

விவேக், இன்பசாகரனைப் பார்த்து சிரித்துக் கொண்டே ஒரு கேள்வியைக் கேட்டு வைத்தான்.

"மேகத்தைக் கண்டு மயிலாடுகிறது என்று சொன்னாய்! அதைப் போல மயிலைக்கண்டு வான்கோழியும் ஆடிப்பார்க்கிறதல்லவா?"

இந்தக் கேள்வி, இன்பசாகரன் முகத்தில் கறுங் கோடுகளைத் கிழிக்கத் தவறவில்லை. அதற்குள் வெகுளித் தனமாக வேணு "கானமயிலாடக் கண்டிருந்த வான் கோழி தானும் அதுவாகப் பாவித்து என்று ஒரு பாட்டு கூட இருக்கிறதே" என்றான்.

சமாளித்துக் கொண்ட இன்பசாகரன், "ஆமாம்பா; நம்ப நண்பன் இன்பசாகரன் கவிதை எழுதி பரிசு வாங்கிட்டானேங்கிற பொறாமையிலே — நீங்க யாரும் என்னைப் பார்த்து கவிதை எழுதுரேன்னு ஆரம் பிச்சி, கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி ஆகி விடாதீங்க!" என்று கேலி செய்தான்...விவேக்கைத் தவிர மற்ற நண்பர்கள் அந்தக் கிண்டலை ரசித்துச் சிரித்தனர்.

"நேரமாகிவிட்டது — வருகிறோம் — ரொம்ப நன்றி — அடுத்த ஆண்டும் கவிதைப் போட்டியிலே நீயே பரிசு வாங்கணும்" இப்படிக் கூறிக்கொண்டே நண்பர் கள் விடைபெற்றுக் கொண்டனர்.

அரியநாயகம், காமாட்சியைக் கூப்பிட்டு மக னுக்கு திருஷ்டி கழிக்கச் சொல்லிவிட்டு தோட்டத்துப் பக்கம் காற்று வாங்கப் புறப்பட்டார். அதுவரை மேஜை யில் இருந்த வெள்ளி மயிலை கறுப்பன் எடுத்துக்கொண்டு மாடிக்குப் போய், இன்பசாகரனின் அறையில் வைத்து விட்டுத் திரும்பினான்.

இன்பசாகரன் மாடிக்குச் சென்று, மறுநாள் முடித்திட வேண்டிய அலுவலகக் கோப்புக்கள் சிலவற்றை படித்திட முற்பட்டான். கறுப்பன் வைத்துவிட்டுப் போன வெள்ளிமயில் எதிரே ஒரு முக்காலியின் மீது இருந்தது. கோப்புகளின் மீது பாதி கவனமும், பரிசுப் பொருளாம் அந்த அழகிய மயிலின் மீது பாதி கவனமுமாக இன்பசாகரன் இருந்தபோது, அவனுக்கருகில் இருந்த தொலைபேசியில் மணி அடித்தது.

அடிக்கடி அவனுக்கு தொலைபேசியில் பேசவேண்டிய அவசியம் ஏற்படுவதுண்டு. அலுவலக விஷயமாக வருகிற தொலைபேசியின் எண்ணிக்கை குறைவாகத்தான் இருக்கும். பாலு, வேணு, ராமு போன்ற நண்பர்களின் தொலைபேசித் தொடர்பு சற்று அதிகமாகவே இருக்கும்.

எல்லாவற்றையும் விட மிகையாக இருப்பது பெண்களிடமிருந்து வரும் தொலைபேசிகள் தான்! அவனுக்கு அறிமுகமாகாத பல பெண்கள் அவனுடன் தொலைபேசியில் பேசுவார்கள். அவனுடன் அலுவலகத்தில் பணியாற்றும் கலியாணமாகாத இளமங்கையர் பலரிடமிருந்தும் தொலைபேசிகள் வரும். அவனைத் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று ஒரு பெரிய பெண் பட்டாளமே "கியூ" வரிசையில் நின்றது.

"... கரைப பக்கம் வருவீர்களா?"

"சினிமாவுக்குப் போகலாமா?"

"கைத்தறி கண்காட்சிக்குச் சென்றுவரலாமே!"

"இந்த வருஷம் சர்க்கஸ் ரொம்ப பிரமாதமாமே! வாங்களேன் போய்ப் பார்த்து வரலாம்"

இப்படிக் குயிலினங்களின் குரலால் குமரிப் பெண்கள் அவனை அழைப்பதுண்டு. அவன் யார் வலையிலும் விழவில்லை. ஓரிரு பெண்கள் தொலைபேசியில் வெளிப்படையாகவே தங்கள் விருப்பத்தைத் தெரிவிதது்த் தங்களை மணந்துகொள்ள வேண்டுமென்று கேட்டுமிருக்கின்றனர்

"இப்படிக் கேட்க உனக்கு வெட்கமாயில்லை? இதெல்லாம் பெற்றோர் உற்றோர் பார்த்து நடக்கவேண்டிய காரியம்" என்று தட்டிக்கழித்துப் பேச்சைத் துண்டித்துக் கொண்டுமிருக்கிறான்.

ஒரு சில பெண்கள், அவன் அழகைப் பற்றி தொலைபேசியில் வர்ணிக்க ஆரம்பித்து விடுவார்கள். வேறு சிலரோ, தங்கள் உடற்கட்டையும் எழிலையும் அவனிடம் விவரிப்பார்கள்.

என் பல் முல்லை! என இதழ் ரோஜா! என் முகம் செநதாமரை! என் விரல் காந்தள்! என்று இப்

படியா மொட்டையாகச் சொல்லுவார்கள்? அவனை வசீகரிக்கும் வாக்கிய அமைப்போடு இணைத்து தங்களைப் பேரழகுப் பெட்டகங்களாக அவனிடம் அறிவித்துக் கொள்வார்கள்.

''இன்பசாகர்! சாகரம் என்றாலே கடல்— நீங்களோ இன்பத்தின் கடல் — அந்தக் கடலில், என் இதழ் முத்துக்களை எடுக்க நீங்கள் ஏன் முத்துக் குளிக்கக் கூடாது?''— இப்படியொருத்தி!

''கதிரவன் போன்ற உங்கள் முகம் பட்டால்; என் முகத்துச் செந்தாமரை எப்படி மலரும் தெரியுமா? அப்படி ஒருநாள் வருமா?'' — இவ்வாறு ஒருத்தி ஏங்குவாள்.

''கண்ணா! எனக்கும் ரோஜா இதழ்கள்! உனக்கும் ரோஜா இதழ்கள்! நமது நான்கு இதழ்களும் அழுந்திக் கசங்கினால் அதிலிருந்து அத்தர் வரும் தெரியுமா?'' — இன்னொருத்தியின் கவர்ச்சிப் பேச்சு இது!

''நீங்கள் மட்டும் எங்கள் வீட்டு நீச்சல் குளத்திற்கு வந்து இருவரும் அந்தக் குளத்தில் ஆடையின்றி நீந்தினால், இரண்டு சந்தனச் சிலைகள் தண்ணீரில் மிதப்பது போல் இருக்கும்'' — மற்றொருத்தி மனம் கூசாது விடுகின்ற அழைப்பு இது!

எந்த அழைப்புக்குரலும், இனிப்புப் பேச்சும்; இன்பசாகரனை அவர்கள் பக்கம் இழுத்துச் சென்று விடவில்லை. இப்போது அடிக்கும் தொலைபேசி மணியும், ஒரு பெண்மணியினுடையதாகத்தான் இருக்குமென்று அவன் ''ஹலோ'' என்றான்.

ஆம்! அவன் நினைத்தபடி அது பெண் குரலே தான்! யார் அந்தப் பெண்? இதுவரையில் பேசியவர்கள் அல்லது வலை வீசியவர்களின் பட்டியலில் அவள் பெயர் உள்ளதா? அல்லது புதிய பெயரா?

''நான் கண்ணம்மான்னு ஒருத்தி பேசுகிறேன்''

இன்பசாகரனுக்கு அவள் யார் என்று தெரியாவிட்டாலும் — பரிசளிப்பு விழா மண்டபத்தில் நாம்

அவளைப் பார்த்திருக்கிறோம்; அல்லவா? அந்தக் கண்ணழகி கண்ணம்மாதான் பேசினாள்.

முதலில் அவனது பரிசுபெற்ற கவிதைக்குப் பாராட்டு—அடுத்து அவன் பல்லாண்டு வாழவேண்டுமென்று வாழ்த்து! இன்பசாகரன், கண்ணம்மாவின் பாராட்டுக்கும் வாழ்த்துக்கும் நன்றி கூறினான்.

''மகளிர் இலக்கியக் கழகம் என ஒரு அமைப்புக்குச் செயலாளராக நான் இருக்கிறேன். தங்களை அந்தக் கழகத்தின் சார்பாகப் பாராட்ட முடிவெடுத்திருக்கிறோம். ஒப்புக்கொள்ளவேண்டும்''.

''எதற்காக... அதெல்லாம் வேண்டாமே!''

''நீங்கள் அப்படிச் சொல்லக் கூடாது. உங்களது அறிவாற்றலையும், கற்பனைத் திறனையும் இலக்கிய உலகம் நிரம்ப எதிர்பார்க்கிறது. தயவு செய்து தேதியொன்று சொல்லுங்கள்''

''தேதியா?''

''உடனே சொல்ல முடியாவிட்டால் நான் வேண்டுமானால் நேரில் வருகிறேன். எப்போது வரலாம் சொல்லுங்கள்?''

''நாளை மாலை நாலரை மணி அளவில் என் அலுவலகத்திற்கு வாருங்கள். எந்தத் தேதி வசதிப்படும் என்று சொல்லுகிறேன்''.

''ரொம்ப நன்றி'' எனத் தெரிவித்துவிட்டு, கண்ணம்மா, ரிசீவரைக் கன்னத்தோடு சேர்த்து அணைத்துக் கொண்டு மெய்மறந்து படுக்கையில் சாய்ந்தாள். அவள் விழிகள் மெதுவாக மூடிக்கொண்டிருந்தன.

அவளை நோக்கி, இன்பசாகரன் இரு கைகளையும் நீட்டிக்கொண்டு, ஓடிவந்தான். அவளும் தனது கரங்களை நீட்டினாள். இருவரது விரல்களும் இணைந்து பின்னிக் கொண்டன.

பஞ்சுப்பொதியை அவிழ்த்துப் பரப்பியது போன்ற முகிற்கூட்டத்தின் மீது அவர்கள் ஒருவரையொருவர் தழுவியவாறு நடந்தனர். அவர்தம் ஆனந்தப்பெருக்கு

கண்ட வானமங்கை, விண்மீன்களை விளக்குகளாய் ஏற்றி வைத்தாள் கண்ணம்மாவின் விழிகளில் காதலின் ஜோதி கிளம்பிற்று. அந்த ஜோதியிற் கலந்து சொக்கிப் போய்க் கிடந்தான் இன்பசாகரன்...சுழற்காற்று ஒன்று மின்வேகத்தில் சீறியடித்தது. அது, கண்ணம்மாவின் பாதி ஆடையைப் பறித்துக்கொண்டு போய்விட்டது. இன்பசாகரனின் சந்தன வண்ண சால்வை காற்றில் பறந்தது மட்டுமல்ல; அவன் அணிந்திருந்த சட்டையும் கிழிந்து போயிற்று. அந்தக் கிழிசலின் இடையே அவனது விரிந்து சிவந்த மார்பகத்தைக் கண்டு அதன்மீது தன்னை மறந்து முகம் பதித்துக்கொண்டாள் கண்ணம்மா!

அவனது கைகளும் கண்ணம்மாவின் முதுகை அழுத்தி அணைத்துக்கொண்டன. அவளோ அவன் முதுகைத் தடவிப் பார்த்தாள்

''ஏன்; என் முதுகைத் தடவி என்ன தேடுகிறாய்?'' எனக் கொஞ்சி முத்தமிட்டான் இன்பசாகரன்.

''உங்கள் கற்பகம் சேர்ந்த மார்பில் என் கனதனம் இரண்டும் தைத்து அப்புறம் உருவிற்றோ என்று அகங்கையால் தடவிப்பார்த்தேன்'' என்று பழம் பாடல் ஒன்றின் வர்ணனையை அள்ளி வீசினாள் கண்ணம்மா!

அது கேட்டு அவனை மேலும் இறுகத் தழுவிக் கொண்டான். இருவரும் இணைந்து மேகத்து மெத்தையில் சாய்ந்து கொண்டனர்...இருவரின் உடல் தகிப்பைத் தாங்காத மேகம் களைப்புற்று மழையை வியர்வையாக வடித்துத் தேய்ந்து போயிற்று. மேக மெத்தை கரைந்து போய் விட்டதால், வானத்திலிருந்து இருவரும் பொத்தெனத் தரையில் விழுந்தனர்.

கண்ணம்மாவின் இமைகள், திடுக்கெனத் திறந்து கொண்டன.

தொலைபேசியின் ரிசீவர், அவள் கன்னத்திலேயே இருந்தது. அந்த இன்பமான நினைவுக்காட்சி நீடிக்கவில்லையே என்ற கவலையுடன் அவள் ரிசீவரை வைத்துவிட்டு, படுக்கையில் உள்ள தலையணையை அணைத்தவாறு புரண்டு படுத்துக் கொண்டாள்.

கண்ணம்மாவும் ஒரு பணக்கார வீட்டுப் பெண் தான். தந்தை மறைந்துவிட்டார் அவளது இளம் வயதிலேயே! விதவைத் தாய் மட்டுமே வேலியாக இருந்து அந்த மலர்க்கொடியை வளர்த்து வந்தாள். கிராமத்திலுள்ள நிலபுலம் தோட்டங்களிலிருந்து கிடைக்கிற வருமானத்தைக் கொண்டு, நகர்ப்புற வாழ்க்கையைத் தொய்வின்றி நடத்த முடிந்தது.

கண்ணம்மாவின் தாய் நீலாம்பிகை அம்மாள் தன் ஒரே மகளை செல்லமாக வளர்த்து அவள் விருப்பத்துக்கேற்ற ஒருவனுக்கு மணமுடித்து வைக்க வேண்டுமென்பதையே தான் கோரும் முக்கிய வரமாகக் கடவுளிடம் நாள்தோறும் முறையீடு செய்துகொண்டிருந்தாள்.

பள்ளிக்கூடத்திலேயே தமிழ்மொழியில் தனித்திறன் பெற்று விளங்கிய கண்ணம்மா, கல்லூரிப் படிப்புக்குச் சேர்ந்த பிறகும் தமிழ் இலக்கியங்களில் தனி ஆர்வம் காட்டி வந்தாள். அவளுக்கு விரைவில் ஒரு திருமணத்தை நடத்திப் பார்த்துவிட்டால், பிறகு, தான் நிம்மதியாகக் கண்ணை மூடலாம் என்று நீலாம்பிகை அம்மாள் அடிக்கடி கூறிக்கொண்டிருப்பதுண்டு.

கண்ணம்மாவோ, அழகும், ஐஸ்வர்யமும் கொண்ட வாலிபனைக மட்டுமல்லாமல் — கற்பனை வளமும் இலக்கியப் புலமையும் கொண்ட ஒரு கட்டழகனைத் தன் இல்வாழ்வுக்குத் துணையாகப்பெற வேண்டுமென்று துடித்துக் கொண்டிருந்தாள். அவளது குறிக்கோளில் பாதி வெற்றி கிடைத்தது போலத்தான் அவள் அன்றைய தினம், கவிஞர் மன்றப் பாராட்டு விழாவில் இன்பசாகரனைப் பார்த்தது என்று சொன்னால், அது அவளைப் பொறுத்தவரையில் சரியான கணக்குத்தான்!

தாயிடம் அனுமதி பெற்று, தன் வீட்டுக்கு அருகாமையிலேயே தன் வீட்டையொட்டிய ஒரு கூடத்தில் மகளிர் இலக்கியக் கழகத்தை அவள் நிறுவியிருந்தாள். அந்தக் கழகத்தில் உறுப்பினர்களாக இருந்த பெண்கள் மிகுந்த பண்புடையவர்களாகவும் — ஏதோ சில "லேடீஸ் கிளப்" பெண்களைப் போலில்லாமல் அடக்க முடையவர்களாகவும் இலக்கியம் பயிலுவதில் அக்கறையுடையவர்களாகவும்

இருந்தனர். தமிழ்ச்சங்க நூல்களும், இலக்கியப் புத்தகங்களும், கலைக் கருவூலங்களும் அந்தக் கழகத்தில் நிறைந்திருந்தன. கல்லூரிக்குச் சென்ற நேரம் போக எஞ்சிய பொழுதை கண்ணம்மா அந்த இலக்கியக் கழகத்திலேதான் கழிப்பது வாடிக்கை!

அந்த ஆர்வம்தான் அன்றைய தினம், அவளை இன்பசாகரன் பரிசு பெற்ற விழாவுக்கும் தள்ளிச் சென்றது. ஆனால் அவள் நினைத்துச் சென்றது ஒன்று—நடந்தது வேறு! கவிதைப் போட்டியின் முடிவை அறியவும், அந்தக் கவிதை எதை என்பதைத் தெரிந்து கொள்ளவும் தான் போனாள். ஆனால் பரிசு பெற்ற அந்த வாலிபனிடம் தன்னையே பறிகொடுத்து விட்டாள்.

வெறும அழகனாக இருந்தால்கூட அவள் இப்படி காதல் வெள்ளத்தில் வீழ்ந்திருக்க மாட்டாள். கலைத்துவம் மிக்க ஒரு கற்பனைக் களஞ்சியம் அவன் எனக் கண்டதும் தன்னையே மறந்துவிட்டாள். அவனை எப்படியும் அடைந்தே தீர வேண்டுமென்று கங்கணம் கட்டிக் கொண்டாள் எனினும, அவன் மீது மையல் கொண்ட மற்ற வனிதைகள் அவசரப்பட்டு மேற்கொண்ட முறைகளை அவள் பின்பற்ற நினைக்க[illegible]

[illegible] முதலில் அவன் மனத்தை அறிந்துகொள்ள வேண்டுமென்ற தீர்மானம் செய்தாள் தன் தூய உள்ளத்தை அவனுக்குத் திறந்து காட்டி அந்த உள்ளத்தில் அவனைக் குடியேறச் செய்ய வேண்டுமென்று திட்டம் தீட்டினாள். முறைப்படி எண்ணங்களைப் பரிமாறிக் கொண்டு இருவரும் வாழ்க்கைத் துணைவர்களாக ஆக வேண்டுமேயல்லாமல், ஏதோ தாகம் எடுத்த பொழுதெல்லாம் எதிரே கண்ட நீர் நிலைகளில் தண்ணீர் குடித்துத் தாகத்தைத் தீர்த்துக் கொள்கிற விலங்கினப் பழக்கத்தை அவள் வெறுத்தாள். அதனால்தான் அவனைப் புரிந்து கொள்ளும் முதல் முயற்சியாக மகளிர் இலக்கியக் கழகத்தில் பாராட்டு விழாவுக்கு ஏற்பாடு செய்து அவனிடம் தேதி கேட்டாள்.

[illegible] க்கு அலுவலகத்துக்கு வந்தால் தேதி குறித்துப் பேசிக் கொள்ளலாம் எனத் தெரிவித்த இன்ப

சாகரனுக்கு மகளிர் இலக்கியக் கழகத்தில் நடக்கப் போகும் பாராட்டு பற்றிய நினைவுகள் நெஞ்சில் கூத்தாடின. கோப்புக்களைக் கட்டி வைத்து விட்டு, சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டு எதிரே உள்ள 'வெள்ளி மயில்' சிலையை உற்று நோக்கிய வண்ணமிருந்தான். அவனது நண்பன் விவேக் கூறிச்சென்ற வார்த்தைகளை இன்பசாகரனின் இதழ்கள் முணுமுணுத்தன.

"மேகத்தைக் கண்டு மயிலாடுகிறது.
மயிலைக் கண்டு வான்கோழியும் ஆடிப்பார்க்கிறது"

விவேக், ஏன் இப்படிச் சொன்னான்? இன்பசாகரனுக்கு பதில் கிடைக்கவில்லை. ஆனாலும் அவனது உள்ளுணர்வு சும்மா இருக்கவில்லை. நடந்து முடிந்து விட்ட ஒரு நிகழ்ச்சிக்கு அவனை அழைத்துச் சென்றது.

கவிதைப் போட்டி குறித்து கவிஞர் மன்றம் அறிவிப்பு விடுத்த இரண்டு நாட்களுக்குப் பிறகு ஒருநாள் இரவு, இன்பசாகரன் தனக்குத் துணையாக வேலைக்காரக் கறுப்பனை அழைத்துக்கொண்டு காரில் ஏறிப் புறப்பட்டான். எங்கே போகிறோம் என்பதைக் காரோட்டிக்குத் தெரிவிக்கவில்லை. "வலது பக்கம் போ, இடது பக்கம் போ" என்று மட்டும் சொல்லிக் கொண்டிருந்தான் இன்பசாகரன். நான்கைந்து கல் தொலைவு கார் சென்றதும், ஒரு பெரிய குடிசைப் பகுதிக்கு அருகே கார் நிறுத்தப்பட்டது. காரோட்டியைக் காரிலேயே விட்டுவிட்டு, இன்பசாகரனும் கறுப்பனும் அந்தக் குப்பத்தை நோக்கி நடந்தே சென்றார்கள். குண்டும் குழியுமாக உள்ள சந்து பொந்துகளில் கறுப்பன் கையிலிருந்த 'டார்ச்' விளக்கின் உதவியோடுதான் அவர்களால் நடக்க முடிந்தது.

புழுக்கத்தின் காரணமாக குடிசைக் கூண்டுக்குள் படுக்க முடியாமல் வாயிற்புறத்தில் கிழிந்த பாய்களில் படுத்திருந்த இணைகளின் மீது டார்ச் விளக்கின் ஒளி திடீரெனப் பாய்ந்த காரணத்தால் அவர்கள் திடுக்கிட்டு எழுந்து கையில் கிடைத்த துணியை எடுத்து உடலை மறைத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. வெட்கத்தால் முகத்தை

மறைத்துக்கொண்ட பெண்டிரும் உண்டு! ''யாரடா அவன் விபரம் புரியாதவன். லைட்டை அடிக்காமப் போடா!'' என்று சீறி விழுந்த ஆடவரும் உண்டு.

அந்தச் சங்கடத்தில் நடையிலேயே தடுமாற்றம் ஏற்பட்டு, பாராங்கல் என நினைத்து ஒரு பெரிய பன்றியின் மீது கால் வைத்து அது உறுமிக்கொண்டு கிளம்பவே, பரபரப்புடன் ஓடி அங்கே எரியாமல் நின்றுகொண்டிருந்த விளக்குக் கம்பத்தின் மீது இன்பசாகரன் பலமாக மோதிக் கொள்ளவும் நேரிட்டது.

அவனைக் காப்பாற்ற ஓடிய கறுப்பன் கால்களி ரண்டும் அசிங்கமாகி நாற்றம் மூக்கைத் துளைத்தது. அந்தக் குடிசைவாசிகளுக்கென்ன மலஜலம் கழிக்க கழிவறைகளா கட்டிவிடப்பட்டிருக்கின்றன? ஓரிரு இடங்களில் கட்டப்பட் டிருந்தாலும் அவற்றை அவர்கள் பயன்படுத்துவதும் இல்லையே. அதன் விளைவைக் கறுப்பன் அனுபவித்தான்.

''இன்னம் எவ்வளவு தூரம் கறுப்பா?'' என்று இன்பசாகரன் கேட்டான்.

''அடுத்த சந்து திரும்பின அவரு வீடு தான்'' என்று கறுப்பன், கால்களைத் தரையில் தேய்த்துக் கொண்டே பதில் சொன்னான்.

மேலும் நடந்தார்கள்.

''டார்ச் விளக்கை அடிக்காதே'' என்று கறுப் பனுக்கு இன்பசாகரன் உத்திரவு போட்டான்.

ஓரிரு குடிசைகளில் ''சிம்னி'' விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அது அவர்கள் நடப்பதற்குச் சற்று உதவி புரிந்தது.

ஒரு குடிசையில் ஒரு பெண், எலும்பும் தோலு மாக உட்கார்ந்திருந்தாள். அவள் மார்பகத்தைச் சப்பி இழுத்துக் கொண்டு, ஒரு துளி பாலால் தொண்டையை நனைத்துக் கொள்ள அவளது குழந்தை, கை, கால்களை உதைத்துக் கொண்டு முயற்சித்த வண்ணமிருந்தது. மற் றும் மூன்று நான்கு குழந்தைகள், ஒரு சட்டியில் உள்ள பழைய சோற்றைத் தங்கள் வயிற்றுக்குள் அனுப்புவதற்கு நான் முந்தி நீ முந்தி எனப் போட்டி போட்டுக் கொண்

டிருந்தார்கள். பீடியைப் புகைத்தவாறு அந்தக் குழந்தைகளை உருவாக்கிய "பிரம்மதேவன்" — அதுதான் அந்தப் பெண்ணின் கணவன் — அம்மிக்கல்லின் மீது உட்கார்ந்து கொண்டு, ஏதோ ஒரு சினிமாப் பாட்டை முணு முணுத்துக் கொண்டிருந்தான்.

அப்போது ஒரு சொறி பிடித்த நாய் உள்ளே ஓடிவந்து குழந்தைகள் தொட்டுக் கொள்ள வைத்திருந்த கருவாட்டுத் துண்டத்தைத் தூக்கிக் கொண்டு ஓடியது. அதைப் பிடிக்க போகிறேனென்று மூத்த பையன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து குப்புற விழுந்து மூக்கை உடைத்துக்கொண்

... கொண்டிருந்த இன்பசாகரனும் கறுப்பனும் இந்த வேடிக்கையைப் பார்க்கத் தவறவில்லை. அது வேடிக்கையா? வேதனையா? என்பது அவரவர் கண்ணோட்டத்தைப் பொறுத்தது அல்லவா?

அனனும் நான்கு வீடுகள் தாண்டியதும் ஒரு குடிசைக்குள் நாலைந்து பெண்கள் மிக்க பரபரப்புடன் காணப் ட்டார்கள், பிரசவ வேதனை தாங்கமாட்டாமல் அந்த வீட்டுக்காரி கூச்சலிடுவது அந்த குப்பம் முழுவதுமே எதிரொலித்துக் கொண்டிருந்தது.

"அவசரமா ஒரு ஆட்டோரிக்ஷா கொண்டாங்க உடனே ஆஸ்பத்திரிக்குப் போகணும்"

இப்படிச் சில குரல்கள் பதைப்புடன் ஒலித்துக் கொண்டிருந்தன

"வேண்டாம் வேண்டாம, சிரசு உதயமாயிட்டு! ஏய், மாரியம்மா! அந்த வாசல்ல இருக்கிற சாக்குப் படுதாவைத் தொங்கப் போடு" — இப்படியொரு கிழவி உரக்கக் கூச்சலிட்டாள்...

"பொம்பளை குழந்தை! பொட்டச்சி! பொட்டச்சி!" இப்படியும் சப்தங்கள்!

தெருவிலே பக்கத்து வீட்டு ஆட்களுடன் பேசிக் கொண்டிருந்த வீட்டுக்காரன், "தொலைஞ்சுது — ஆறுவதும் பொட்டையாப் பொறந்துடுதா?" என அங்கலாய்த்துக் கொண்டான்.


TIP TOP
BANIANS
TIPTOP
Banians

பிரசவத்தை யொட்டிய எல்லாக்காரியங்களும் அந்தக் குருவிக் கூட்டுக்குள்ளே நடைபெற்றுக் கொண்டு இருந்தன.

அந்தச் சமயம் பார்த்து மின்னல்கள், இடி முழக்கங்கள். அவற்றைத் தொடர்ந்து மழை வேறு கொட்ட ஆரம்பித்தது. அப்போதுதான் உலகத்துக்கு வந்த அந்தச் சின்னப் பெண் சிசுவை மழையே குளிப் பாட்டிவிட்டது என்று சொல்லலாம். அவ்வளவு ஓட்டைகள் நிறைந்த குடிசை அது!

நனைந்துகொண்டே இன்பசாகரனும் கறுப்பனும் வேகமாக நடந்து சென்றார்கள். கோடை மழைபோல் பெய்த மழை திடீரென நின்று விட்டாலுங்கூட அந்தக் குப்பத்தில் உள்ள குண்டு குழிகளையும், குடிசைகளையும் ஓரளவு தண்ணீரால் நிரப்ப அது தவறவில்லை. அடுத்த சந்துப்பக்கம் அவர்கள் திரும்பியபோது ஒரு குடிசையில் ஒப்பாரிச் சப்தம் கேட்டது.

கறுப்பன் மட்டும் சிறிது நின்று அங்குள்ளவர் களிடம் விசாரித்து விட்டுச் சொன்னான்: ''ஒன்றுமில்லே எஜமான்! மழை பொழிஞ்சப்ப, டமார்னு ஒரு குறை வீசுச்சில்லே; அப்ப — இந்த கூறையிலிருந்த மரம் வேகமாக விழுந்து ஒரு உயிர் போயிட்டுது! இந்த வூட்டுக்கே ஒரே பிள்ளையாம். பாவம் மண்டை பிளந்து போச்சு.''

இன்பசாகரன், ''த்சு! த்சு!'' என்று கூறி விட்டு, ''சரி சரி வா போகலாம் — அந்த மனுஷன் இருக்கிற வீட்டைக் கண்டுபிடி சீக்கிரம்'' என்று அவசரப் படுத்தினான்.

''அதோ அந்தக் கடைசியிலே முணுக்முணுக் குன்னு விளக்கு எரியுதே அந்த வீடுதான் வாங்க'' என்று கறுப்பன் கொஞ்சம் வேகமாக நடந்தான்.

இறுதியாக அவர்கள் தேடிச்சென்ற குடிசைக்கு வந்துவிட்டனர். கதவு தட்ட தேவையில்லாமலே வாசல் திறந்திருந்தது. கதவு இருந்தால்தானே அதைத் தட்டிக் கொண்டிருக்க வேண்டும்.

கறுப்பன், இன்பசாகரனை ஜாடை காட்டி உள்ளே அழைத்துக்கொண்டு சென்றான். அவர்களை இருமல் முழக்கம் வரவேற்றுக் கொண்டிருந்தது. இருமிய பொழுதெல்லாம் எச்சிலையும் கோழையையும் துப்ப சாம்பல் நிறைத்த சட்டியொன்று அருகே அணி செய்ய, பிரிந்தும் நைந்தும் போன கயிறுகளால் பின்னப்பட்ட ஒரு மூங்கில் மரத்துக் கயிற்றுக் கட்டில் என்னும் அம்ச தூளிகா மஞ்சத்தில் அவர்கள் தேடிச் சென்ற அந்த மாமன்னர் சயனித்திருந்தார்.

கொலுமண்டபத்தில் சேடியர் நின்று சாமரம் வீசுவது போல செல்லரித்துப் போன பனை ஓலை விசிறிகளால் அந்த மாமன்னரின் மனைவியும், மகளும் அவருக்கு விசிறிக் கொண்டிருந்தனர்.

இன்பசாகரனையும் கறுப்பனையும் கண்ட அவர், இருமலின் பின்னணியினூடே ''வாங்க! வாங்க!'' என்று வரவேற்று, வாயில் பீறிட்ட சளியையும் எச்சிலையும் சாம்பல் சட்டியில் உமிழ்ந்தார்.

''கவிஞரய்யா! உடம்பு எப்படியிருக்கு இப்போ?'' என்று இன்பசாகரன் கேட்டான்.

''கரூரில் தோன்றி, பாலூரில் வளர்ந்து, வேலையூர் கண்டு, சேலையூரைச் சேர்ந்து, இறுதியில் சாவூரை அடைவது என்று அண்ணா அழகாக ஒருமுறை கூறினார் அல்லவா? அதற்கொப்ப எல்லா ஊர்ப்பயணத்தையும் முடித்துக்கொண்டு கடைசி ஊர்ப்பயணத்துக்காக மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொண்டிருக்கிறேன்'' என்று பதில் வந்தது, கவிஞரய்யாவிடமிருந்து.

புலவர் பெருங்கோவை எல்லோருமே கவிஞரய்யா என்றுதான் அழைப்பது வழக்கம். அவர் எழுதிய கவிதைகள் அவருக்குப் புகழைச் சேர்த்த அளவுக்குப் பொருளைச் சேர்க்கவில்லை. அவரைப் பாராட்டிப் பெருமை செய்து அவர் எழுதிய கவிதை ஏடுகளை நூல்களாக வெளியிட்ட பதிப்பகத்தினர் பலர், தாங்கள் பெற்ற இலாபத்தில் ஒரு சிறு பகுதியை அவருக்குக் கொடுத்திருந்தால் கூட அவர் இப்படி ஒரு குப்பத்தில் குச்சுக்கூண்டில்

கிடந்திருக்க வேண்டியதில்லை. நூறோ ஒருநூறோ "சன்மான"மாக வழங்கிவிட்டுப் பதிப்பகத்தார் கொள்ளை யடித்துப் பங்களாக்கள் கட்டிக் கொண்டார்கள்.

பாவம்! பெருங்கோ, எங்கேயோ ஒரு குப்பை மேட்டைத் தனது அரண்மனையாகக் கருதிக் கொண்டு, அதில் மனைவி நிலாவுடனும் — மகள் பிறைக்கொடி யுடனும் வாழ்ந்து வந்தார்.

"குடிசைமாற்று வீடுகள் நிறையக் கட்டியிருக்கிறார்களே; அதில் ஒரு வீடு உங்களுக்குக் கிடைக்க வில்லையா?" இன்பசாகரன் இந்தக் கேள்வியைக் கேட்டு விட்டு அவரை மிகுந்த அனுதாபத்துடன் பார்த்தான்.

"குடிசை மாற்று வீடுகள், குடிசைப் பகுதி உள்ள இடங்களில் கட்டப்பட்டன. ஏற்கனவே குடிசையில் வாழ்ந்தவர்களுக்கே அந்த வீடுகள் முறைப்படி கொடுக்கப் பட்டு வந்தன. இந்தக் குடிசைப் பகுதியையும் அகற்றி விட்டு குடிசை மாற்று வாரியக் கட்டிடங்கள் கட்டுவதற் காக முன்பு இருந்த அரசு எல்லா ஏற்பாடுகளையும் செய் திருந்தது. அந்த அரசின் காலத்தில்தான் இந்தத் திட்டமே புதிதாகத் துவங்கப்பெற்று 1971 முதல் 1975 முடிய நாலாண்டு காலத்தில் இருபதாயிரத்துக்கு மேற்பட்ட குடியிருப்புக்களை குடிசை வாழ்வோருக்காக கட்டிமுடித்தனர். இந்தக் குப்பத்துக்கு அந்த நன்மை கிடைப்பதற்குள், அந்த அரசையே கவிழ்த்துவிட்டார்கள். அதனால் பாதிக்கப் பட்ட குப்பங்களில் நான் இருக்கும் இந்தக் குப்பமும் ஒன்று", என்ற விவரங்களைக் கவிஞர் பெருங்கோ சொல்லி முடிப்பதற்குள் பல தடவை இருமிச் சளியைத் துப்ப வேண்டியிருந்தது.

அவரது மெலிந்து தேய்ந்துபோன நெஞ்சகத்தை அவரது துணைவி நிலா, தடவிக் கொடுத்துக் கொண்டிருந்தாள். பேச்சை நீட்டாமல் விஷயத்துக்கு வரலாம் என்று கருதிய இன்பசாகரன், "நான் உங்களிடம் ஒரு முக்கிய விஷயமாக வந்தேன்" என்று ஆரம்பித்தான்.

"ஆமாம் - கறுப்பன் சொன்னான். சரி அழைத் துக் கொண்டு வாப்பா! என்று கூறினேன்" என்றார் கவிஞரய்யா!

''கொஞ்சம் தனியாப் பேசணும்!'' என்றவாறு இன்பசாகரன், நிலாவையும் பிறைக்கொடியையும் பார்த்தான்.

கவிஞரய்யா, அந்த ஓயாத இருமலோடும் சிறிது வாய்விட்டுச் சிரித்துக் கொண்டே, ''அவர்கள் எங்கே போவார்கள்? இங்கென்ன கூடம், தாழ்வாரம், அடுக்களை, படுக்கையறை எல்லாம் இருக்கிறதா என்ன, எங்கேயாவது போய் இருக்க? சரி! சரி! அவர்கள் ஒதுங்கி நிற்க வேண்டிய ''வெள்ளி மாடம்'' இந்தக் குப்பத்து வீதி தான்! அங்கே போய் அவர்கள் நின்றுகொள்வார்கள். நீங்கள் சொல்லுங்கள் வந்த விஷயத்தை'' என்றார்.

மனைவியும், மகளும் தெருப்பக்கம் போய்விடவே கவிஞரய்யா இன்பசாகரனின் உதட்டசைவை ஆவலுடன் எதிர்பார்த்தார்.

''ஒன்றுமில்லே. கவிதைப் போட்டி அறிவிப்பு ஒன்று வந்திருக்கிறது'' என இழுத்தாற்போல் பீடிகை போட்டான் அவன்.

''ஆமாம்! ஆமாம்! நான்கூடப் பார்த்தேன். ஏதோ அந்த விழா இந்த விழான்னு அரசாங்கம் நடத்தி, அதற்குப் பெரிய விளம்பரமெல்லாம் கொடுக்கிறார்களே! பழைய அரசாங்கத்தைப் போல இவர்களுக்கும் தமிழ் மீதும், தமிழ் இலக்கியங்கள் மீதும் பற்று இருப்பதாகக் காட்டிக்கொள்ள—இதெல்லாம் புலியைப் பார்த்து பூனை சூடு போட்டுக் கொண்ட கதை! கானமயிலாடக் கண்டு வான்கோழியும் தன் பொல்லாச் சிறகை விரித்தாடிய வேடிக்கை!'' இப்படி மளமளவென்று பேசிக்கொண்டே போனார் கவிஞரய்யா!

''நான மசால்ல வந்தது அந்தக் கவிதைப் போட்டியை இல்லே! கவிஞர் மன்றத்தார் ஆண்டுதோறும் நடத்துறாங்களே, அந்தப் போட்டியை!'' என்றான் இன்பசாகரன்.

''ஓ! அதுவா? போன ஆண்டு கூட கவிஞர் கம்பனடியான், ஒரு அற்புதமான கவிதை எழுதி அந்தப் போட்டியிலே வெற்றி பெற்றாரே! அந்தப் போட்டிக்கு

நடுவராக இருந்தவர்களில் நானும் ஒருவன். கவிதை எழுதும் போட்டியில் என்னைக் கூடப் பங்கு பெறச் சொன்னார்கள். நான் தான் மறுத்துவிட்டேன். அது போகட்டும். இன்பசாகர்! நீங்கள் இந்தப் போட்டி குறித்து என்னிடம் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?'' என்று மூச்சு முட்டக் கேட்டார் கவிஞரய்யா. கறுப்பன், அவருக்கு விசிறிக்கொண்டு அவர்களிடையே நடைபெற்ற உரையாடலைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

''நான் அந்தப் போட்டியில் கலந்து கொள்ள விரும்புகிறேன்''

''அப்படியா! மகிழ்ச்சி! வாழ்த்துக்கள்! ஆமாம்; நீங்கள் ஒரு கவிஞரா?''

'' கவிஞனில்லை ! உங்களிடம் உண்மையைச் சொன்னால் என்ன? அந்தக் கம்பனடியான், என்னோடு ஒன்றாக என் அலுவலகத்தில் வேலை பார்க்கிறவர்தான். அவர் கவிஞர் என்ற புகழ்பெற்று எப்பொழுது பார்த்தாலும், பாராட்டும் விழாவும் என்று ஒரே ஆர்ப்பாட்டம் தான்! அதைப்பார்த்த எனக்கு ஒரு ஆர்வம்! நாமும் கம்பனடியானைப் போல புகழ் பெறவேண்டும். கம்பனடியானைச் சூழ்ந்து கொண்டு அவர் நண்பர்கள் பாராட்டுவதுபோல என்னையும் பாராட்ட வேண்டும்...அதற்கு ஒரே வழி இந்த ஆண்டு கவிஞர் மன்றத்துப் பரிசுப் போட்டியிலே கலந்து கொள்வது தான் என்று தீர்மானித்தேன்''

'' அப்படியா? புரிகிறது! புரிகிறது! போட்டிக்கென நீங்கள் எழுதிய கவிதையை என்னிடம் காட்டிச் செல்ல வந்திருக்கிறீர்கள்?''

'' இல்லை! கவிஞரய்யா! நீங்களே ஒரு கவிதை எழுதித் தரவேண்டும். அதை என் பெயரால் அனுப்ப வேண்டும்!''

'' அதாவது கவிதை என் படைப்பு! ஆனால் உரிமை உமக்கு! இல்லையா?''

'' மன்னிக்கவும். அப்படித்தான்!''

'' தெளிவாகச் சொல்ல வேண்டுமானால் மயிலின் இறகுகளைச் செருகிக் கொண்டு வான்கோழி, ஆட விரும்புகிறது''.

இன்பசாகரன் தலைகுனிந்தவாறு உட்கார்ந்திருந்தான். இடையே கவிஞரய்யா, இருமலின் பயங்கரமான தாக்குதலுக்கு ஆளாகிப் பிறகு தன்னைச் சரிப்படுத்திக் கொண்டு தலையணையில் சாய்ந்தவாறு பேசினார்.

" தம்பி! இன்பசாகர்! வான்கோழி, தன்னை வான்கோழியாகவே நினைத்துக் கொண்டிருக்க வேண்டுமே தவிர, மயிலைப போல காட்டிக் கொண்டு ஊரை ஏமாற்ற வேண்டுமென்று நினைப்பது சரியல்லவே!"

இன்பசாகரன், கெஞ்சுகிற தோரணையில், அவரது முழங்கால்களைப் பிடித்துக்கொண்டு, "அய்யா இப்படியெல்லாம் சொல்லாதீர்கள்! தங்களை நம்பி வந்துவிட்டேன். இதோ ஆயிரம் ரூபாய் பணமும் கொண்டு வந்திருக்கிறேன்.. தயவு செய்து பெற்றுக் கொள்ளுங்கள். பரிசுப் போட்டி முடிந்து நான் வெற்றி பெற்றதும் முதல் வேலையாக ஒரு நல்ல வீட்டில் உங்களைக் குடி அமர்த்தி, உங்களுக்காகும் மருத்துவ சிகிச்சை அனைத்தையும் என் பொறுப்பிலே ஏற்றுக்கொண்டு, உங்களைத் திடகாத்திரமுள்ள கவிஞராக ஆக்கிக் காட்டுகிறேன். அதன் பிறகு நிறைய எழுதப் போகிறீர்கள் நீங்கள்! அவற்றையெல்லாம் நான் வெளியிட்டு, போதும் போதும் என்று சொல்கிற அளவுக்குப் பொருள் வழங்குகிறேன்" என்றதும், கவிஞரய்யா புன்னகை பூத்தவாறு, "அப்படி நான் எழுதுகிற நூல்கள் எல்லாவற்றிலும் பெயர் உனக்கு! பணம் எனக்கு! அப்படித்தானே?" என்றார் கேலியாக.

இவர்களது உரையாடலின் இறுதிப் பகுதியை கவிஞரின் மனைவி நிலா கேட்டுக்கொண்டே நின்றுகொண்டிருந்தாள். காரணம், அவர் பயங்கரமாக ஒருமுறை இருமியபோதே அவள் துடிதுடித்து உள்ளே நுழைந்து விட்டாள். ஆனால் கறுப்பன், அவரைக் கவனித்துக் கொள்வதைப் பார்த்து ஆறுதல் பெற்று ஒதுங்கி நின்று விட்டாள்.

இன்பசாகரனின் வார்த்தைகள் அவளை ஈர்த்து விட்டன என்பதற்கு அடையாளமாக, கணவனிடம் நெருங்கி வந்து, காதில் ரகசியமாக ஏதோ சொன்னாள். கவிஞரய்யா, மனைவி நிலாவை ஏற இறங்கப் பார்த்தார்.

நிலா, தன் கண்களால் அவரைப் பார்த்து இறைஞ்சி நின்றாள். அடுத்த கணமே, கவிஞரய்யா—இன்பசாகரன் கையிலிருந்த ஆயிரம் ரூபாய் நோட்டுக் கத்தையை வாங்கி, அவளது கைகளில் ஒப்படைத்தார்.

''சரி, தம்பீ—எழுதி வைக்கிறேன்; காலையில் கறுப்பனை அனுப்புங்கள்'' என்றார் கவிஞரய்யா!

எல்லையற்ற மகிழ்ச்சியுடன் இன்பசாகரன் அவரது கரங்களைப் பற்றி நன்றி தெரிவித்துக்கொண்டு எழுந்தான்.

அவர் சொன்னபடியே மறுநாள் காலையில் கறுப்பன் அந்தக் குப்பத்திற்குச் சென்று கவிதையைப் பெற்று வரப்புறப்பட்டான். கறுப்பன் வருகைக்காக, இன்பசாகரன் காத்திருந்தான். கவிஞரய்யா சொன்ன சொல் தவறாமல் அந்தக் கவிதையை எழுதி அனுப்பிவிட்டார்.

அதுதான், இன்பசாகரனுக்குப்பரிசு வாங்கித் தந்த கவிதை! அந்தப் பரிசுப் பொருள் ''வெள்ளி மயில்'' இப்போது அவனுக்கு எதிரே இருக்கிறது. அந்த மயில் ஆடுவது போல் தெரிகிறது அவனுக்கு! அது மயிலின் ஆட்டமா? அல்லது வான்கோழியின் நடனமா?

சிந்தனை கலந்து ஒரு நெடிய மூச்சு விட்டுக் கொண்ட இன்பசாகரனிடம் கறுப்பன் அவசரமாக ஓடிவந்து ''சின்ன எஜமான்! சேதி தெரியுமா? கவிஞரய்யா, இறந்து போயிட்டாராம்'' என்று கண்கலங்கச் சொன்னான்.

இன்பசாகரன், அந்த அதிர்ச்சியான சேதி கேட்டு அலட்டிக் கொண்டதாகத் தெரியவில்லை.

''அப்படியா?'' என்ற கேள்வியோடு நிறுத்திக் கொண்டான்.

கவிஞரின் எதிர்காலத்தை எப்படியெல்லாம் ஒளிமயமாக ஆக்கப் போகிறேன் என்று அன்றைக்குச் சொன்னான்? ஆனால் அவை அனைத்தையும் மறந்து விட்டவன்போல, ''கறுப்பா! உடம்பு ஒரே வலியா இருக்கு! கொஞ்சம் அமுக்கிவிடு'' என்று படுத்துக்கொண்டான்.

மிகுந்த லாவகமாக, உடம்பு பிடிக்கும் கறுப்பன் இன்பசாகரனின் கழுத்து முதல் கால்விரல்கள் வரையில் தனது திறமையைக் காட்டி உடம்பை அமுக்கிவிட்டுக் கொண்டிருந்தான். அந்த சுகத்தில் இன்பசாகரன் நன்ருகக் குறட்டை விட்டுத் தூங்கிஞன்.

சரியாக நாலரை மணிக்கு இன்பசாகரனின் அலுவலகத்திற்குப் போய்ச் சேர்ந்து விடவேண்டுமென்ற நினைவு, நெஞ்சில் வேகவேகமாக ஊஞ்சலாட நிலைக்கண்ணாடி முன் நின்று தன்னை அழகுபடுத்திக் கொண்டிருந்தாள் கண்ணம்மா.

'என்னை உடுத்திக்கொள்ளேன்' என்று ஒன்ருே டொன்று போட்டி போட்டுக்கொண்டுக் கிடந்த சேலைகளில் சற்று வெளிர் மஞ்சள்நிறச் சேலைக்கு, அன்றைய தினம் அவள் உடலைத் தழுவும் வாய்ப்புக் கிடைத்தது. அவள் நிறத்துக்கு அந்த ஆடை எடுப்பாகவும் இருந்தது.

மை தீட்டிக் கொண்டுதான் விழியழகைப் பெருக்கிட வேண்டுமென்ற தேவை அவளுக்கில்லை. சந்தனத் தூளைக் கையில் தேய்த்து முகத்தில் லேசாகப் பூசிக் கொண்டாள். சில பெண்கள் திருத்தணி முருகனுக்கு முகம் முழுவதும் விபூதி போல பவுடர் போட்டுக்கொண்டு பவனி வருவதை அவள் நினைத்துக்கொண்டு மனத்துக்குள்ளாகவே சிரித்துக்கொண்டாள்.

விழியம்பு பாய்வதற்கேற்ற விற்புருவங்களையும் மெருகேற்றிக் கருமையாக்க வேண்டிய அவசியம் அவளுக்கில்லை. பிறை நெற்றியில் குங்குமம் ஒளிவிட்டுக்கொண்டிருந்தது.

''ஓயாமல் ஏன், அப்படியும் இப்படியும் திருப்பித் திருப்பி என்னைப் பார்த்துக் கொண்டிருக்கிருய் — உன் கண்ணழகு ஒன்று போதாதா. இந்த உலகத்தையே வெல்வதற்கு?''— என்று அவளைப் பார்த்துக் கண்ணாடி கேட்பது போலிருந்தது.

அவள் மனத்தில் திடீரென ஒரு சந்தேகம். தன்னை வரச் சொல்லிவிட்டு ஒருவேளை அவர் அலுவலகத்திற்கு

வராமல் இருந்துவிட்டால் என்ன செய்வது என்ற சந்தேகம் தான் அது! 'அப்படி வராமலா இருந்து விடுவார்! கட்டாயம் வருவாரடி!' என்று நெஞ்சம் ஆறுதல் வழங்கியது.

வருகிறேன் என்று பொய் சொல்லி என்னை ஏமாற்றிவிட்டால்?— சந்தேகத்திற்குத்தான் நம்பிக்கையை விட வலிவு அதிகமாயிற்றே! அதனுல், அவள் அன்று காலையில் படித்த கலித்தொகை பாட்டு அவளையறியாமல் அவளது மெல்லிய இதழ்களில் குழலொலியென எழுந்து இன்பம் பெய்தது.

> "வாராது அமைவானே? வாராது அமைவானே?
> வாராது அமைகுவான் அல்லன்
> ஈரத்துள் இன்னவை தோன்றின், நிழல் கயத்துள்
> நீருள் குவளை வெந்தற்று."

வராமல் இருக்கக் கூடியவனல்ல அவன்! அன்பு உள்ளம் அருள் உள்ளம் கொண்ட அவனிடம் அப்படி ஒரு பொய் தோன்றுமேயானுல் நிழல் நிறைந்த குளத்து நீரில் கிடக்கும் நீலமலரில் நெருப்பு பிடித்தது என்பது போலத்தான் நம்ப முடியாததாக அது இருக்குமென்று, கலித்தொகை கூறுவதைக் கண்ணம்மா, உறுதியாக ஏற்றுக்கொண்டு, கடைசியாக ஒருமுறை கண்ணுடியில் பார்த்துவிட்டு, வீட்டை விட்டுப் புறப்பட்டாள்.

சரியாக நாலரை மணிக்கு இன்பசாகரனின் அலுவலக அறைக்கு வெளியே சென்று அங்கிருந்த ஒரு ஊழியரிடம் தனது பெயரையும் மகளிர் இலக்கியக்கழகம் என்ற முகவரியையும் குறித்து அனுப்பினுள்.

சுமார் அரை மணி நேரம் காத்திருந்தாள். உள்ளே சென்ற ஊழியர் வரவே இல்லை. மணி ஐந்தும் அடித்தது. கண்ணம்மாவுக்கு ஒன்றும் புரியவில்லை. கதவைத் திறந்து கொண்டு உள்ளே போய்விடலாமா என்று கூட நினைத்தாள். அந்த முடிவோடு எழுந்தும் விட்டாள். அதற்குள் கதவைத் திறந்து கொண்டு இன்பசாகரனே வெளியே வந்து விட்டான்.

"வணக்கம், நான்தான் கண்ணம்மா!" என்ருள் கைகுவித்தவாறு!

அவனும் அவளுக்குத் திரும்ப வணக்கம் சொல்லி விட்டு, ''காக்க வைத்துவிட்டேன்'' என்று அவளிடம் வருத்தம் தெரிவிக்கும் பாவனையில் பேசினுன்.

''பரவாயில்லே! உங்களைப் பார்த்ததே போதும்'' என்று கூறிவிட்டு, தான் அவசரப்பட்டு உணர்ச்சியைக் கொட்டி விட்டதாக உணர்ந்தாள் கண்ணம்மா!

''இப்பத்தான் ஆபீஸ் வேலே முடிந்தது! இன்னைக்கு சில முக்கியமான வேலேகள். மணி அஞ்சாகிவிட்டது. ஆபீஸ் மூடுற நேரம் — என் காரில் வந்தால் பேசிக்கொண்டே போகலாமே!'' என்றுன், இன்பசாகரன்!

இப்படி ஒரு அழைப்புக்குத் தவமிருந்தாள் கண்ணம்மா என்ருலுங்கூட திடுமெனக் காரில் வருமாறு கூப்பிட்டு விட்டானே என்பதால் ஏற்பட்ட குழப்பமும் அவளைத் திக்குமுக்காடச்செய்தது. இப்படித்தான் எல்லாப் பெண்களிடமும் நடந்து கொள்வானே என்ற சந்தேகப் புயலும் எழுந்தது. வருகிறேன் என்று சொல்லாமலும் வரமுடியாது என்று மறுக்காமலும், இன்பசாகரனைத் தொடர்ந்து மாடிப்படிகளில் இறங்கி வந்தாள்.

கார், தயாராக வாயிற்புறத்தில் நின்று கொண்டிருந்தது. இன்பசாகரனின் கைப்பெட்டியைத் தூக்கிக்கொண்டு வந்து கறுப்பன் காரின் பின்னுல் வைத்தான். இன்பசாகரன், கண்ணம்மாவைப் பார்த்து, காரின் பின்புற இருக்கையில் ஏறிக்கொள்ளச் சொன்னுன்.

அவனும் தன்னுடன் வந்து உட்காரப்போகிருன்; முன்பகுதி இருக்கையில் அந்தக் கறுப்பு வேலேக்காரன் உட்காரப் போகிருன். இதென்ன தர்ம சங்கடம். இப்படிக் கண்ணம்மாவின் மனம் படபடத்தது என்ருலும், அவள் அந்த வாய்ப்பை அறவே தட்டிக்கழித்துவிடத் தயாராக இல்லே.

முன்பகுதியில் உட்காரப் போன கறுப்பனைத் தடுத்து இன்பசாகரன் ''கறுப்பா! நீ ஏதாவது பஸ் ஒன்றைப் பிடித்து வீடு போய்ச்சேர்! எனக்குக் கொஞ்சம் வேலே யிருக்கிறது'' என்று கூறிக்கொண்டே, காரின் முன்பகுதி இருக்கையில் உட்கார்ந்து கொண்டான்.

எங்கே தன்னருகே உட்கார்ந்து விடுவானோ என்று எண்ணிக்கொண்டிருந்த கண்ணம்மாவுக்கு அது எவ்வளவு பெரிய ஏமாற்றமென்று விவரிக்கவே முடியாது.

''டிரைவர்! காரைக் கடற்கரை காந்தி சிலைப் பக்கம் விடு'' என்றான்.

கார் புறப்பட்டது. கறுப்பன், மூக்கின் மீது விரலை வைத்துக்கொண்டு அயர்ந்து போய் நின்றான்.

''தக்காளிப்பழம் போலவும் பச்சைக்கிளி போலவும், மாம்பழம் போலவும், செக்கச்செவேல்னு, லட்டுலட்டா சின்னச்சின்னக் கன்னிப் பெண்ணுங்க சின்ன எஜமானைச் சுத்திகிட்டு இருந்ததுங்க! ஒருத்தி கிட்ட கூட முகம் கொடுத்துப் பேசமாட்டாரு! இன்னைக்கு என்னடான்னா இந்தப் பெண்ணுக்கு அடிச்சுதே அதிர்ஷ்டம்!'' கறுப்பனின் வாய் முணுமுணுத்தது. அங்கேயே சிலை போல நின்றவன், ''உம்'' என்று ஒரு பெருமூச்சு விட்டுக் கொண்டு, அதை விட்டு நகர்ந்தான்.

காந்தி சிலைக்கருக்கே கார் நின்றதும், இன்பசாகரன் இறங்கிக் கொண்டு கண்ணம்மாவைப் பார்த்து ''இப்படிக் கடற்கரையில் உட்கார்ந்து பேசலாமே!'' என்றான்.

பாராட்டு விழாவுக்குத் தேதி கேட்க வந்தவளுக்கு இப்படியொரு பலாச்சுளை அழைப்பு கிடைத்ததும், உடல் முழுதும் சிலிர்த்துப்போயிற்று. இன்பசாகரனின் கார் டிரைவருக்கும் ஆச்சரியம் தாங்க முடியவில்லை; தன்னுடைய சின்னய்யாவுக்கு இன்றுதான் காதல் திருவிழாவுக்கு பந்தல்கால் நடப்படுகிறது போலும் என்று நினைத்துக் களிப்படைந்தான்.

கடற்கரை மணலில் சிறிது தூரம் நடந்து சென்று இருவரும் அமர்ந்தார்கள். கண்ணம்மா எதிர் பார்த்தபடி, அவன் அவளின் அருகே உட்காரவில்லை. ஒருவேளை, இருட்ட ஆரம்பித்த பிறகு நெருங்கி வருவானோ, என்னவோ!

''உங்கள் மகளிர் இலக்கியக் கழகத்தில் எத்தனை உறுப்பினர்கள்?''

"முப்பது உறுப்பினர்கள்"

"எல்லோரும் கல்லூரி மாணவிகளா?"

"எல்லோருமல்ல; பெரும்பாலோர் கல்லூரி மாணவிகள்! சிலபேர் படிப்பை நிறுத்திவிட்டவர்கள்"

"மணமானவர்கள் எத்தனை பேர் இருக்கும்?"

"நாலைந்து பேர் இருப்பார்கள்"

"அந்த நாலைந்தில் உங்கள் பெயரும் ஒன்று?"

"இல்லை! இல்லை!"

இந்தப் பதிலைச் சொல்வதற்கு கண்ணம்மா மிகுந்த அவசரம் காட்டினாள். பிறகு நீண்ட நேரம் அமைதிதான் நிலவிற்று. இன்பசாகரன், சுற்றுமுற்றும் பார்த்தான். அதைக் கண்ணம்மா, கடைக்கண்ணால் கவனித்தாள்.

"ஏதோ பேச நினைக்கிறார்! அதனால் தான் இப்படி அலட்டிக் கொள்கிறார்' என்று அவள் முடிவு செய்து கொண்டாள்.

அப்போது ஐந்தாறு பெண்கள் கலகலவெனப் பேசிக் கொண்டு அவர்கள் அமர்ந்திருந்த பக்கம் வந்தனர். அவர்களை இன்பசாகரன் உற்று நோக்கினான். எல்லோருமே அவனுக்குத் தெரிந்த பெண்கள் தான். இரண்டொருவர் அவன் அலுவலகத்திலேயே வேலை பார்ப்பவர்கள், மற்றவர்கள், அவனிடம் தொலைபேசி மூலமாகவும் நேரிடையாகவும் தங்கள் காதலை வெளியிட்டு அவன் உறவை வேண்டியவர்கள். அவர்கள் அத்தனை பேரையும் அவன் நிராகரித்து விட்டிருந்தான்.

அந்தக் குழுவினர், இன்பசாகரன் அங்கே இருப்பதைக் கவனிக்காமலேயே ஏதோ வம்பளந்து கொண்டு போனார்கள். அவனும், அவர்கள் தன்னைப் பார்த்து விடாதபடி கடலின் பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டிருந்தான்.

அவன் எதிர்பார்த்துக் கொண்டிருப்பதோ அவனது நண்பர்கள் பாலு, வேணு, விவேக், ராமு ஆகியவர்களை; ஆனால் அங்கு கும்மாளம் போட்டுக் கொண்டு

வந்துவிட்டதோ அவனிடம் காதல் மனு போட்டுக் கொண்டிருக்கும் காரிகையர் கூட்டம்!

நண்பர்களை அவன் எதற்காக எதிர்நோக்குகிறான்? தான் ஒரு பெண்ணுடன் கடற்கரைக்கு வந்திருப்பதை அவர்கள் பார்க்கவேண்டும்! இது என்ன புதுமையான ஆசை? இன்பசாகரனின் நண்பர்கள் அவனைக் கேலி செய்யாத நாளே இல்லை. பெண்களைக் கண்டால் ஏண்டா இப்படி பயந்து ஓடுகிறாய் என்று!

அப்பா, அம்மா பார்த்து முறைப்படி செய்துவைக்கும் திருமணத்தையே தான் விரும்புவதாகவும், காதல்-களவு முறைகள் எல்லாம் தனக்குப் பிடிக்காதென்றும் அவன் அவர்களிடம் தனது கொள்கையை விளக்கியிருந்தான். அவனது நண்பர்களோ, ஒவ்வொருநாளும் கடற்கரைக்கு யாராவது ஒரு காதலியோடு வந்து மணல்வெளியில் ஓடிப்பிடித்தும், உருண்டு விளையாடியும், நுரைத்துப் பொங்கிவரும் கடல் அலைகளால் ஆடைகள் நனைத்துக்கொண்டு மகிழ்ந்தும் கொட்டமடித்துத் திரும்புவதை வாடிக்கையாகக் கொண்டவர்கள்.

அவர்களுக்கிடையே இன்பசாகரன் ஆண் பெண் உறவு எவ்வாறு அமையவேண்டும் என்பது குறித்தும், இல்வாழ்க்கை என்பது எப்படி நிச்சயிக்கப்படவேண்டும் என்பது குறித்தும் 'பிரசங்கம்' செய்வதை அவர்களால் ஏற்றுக்கொள்ள முடிவதில்லை.

அன்று காலை அலுவலகத்தில் இடைநேரத்தின் போது அந்த நண்பர்களிடம் இன்பசாகரன் சிக்கிக் கொண்டான்.

"நேற்று உங்க அப்பா இருந்தார்னு ஒண்ணும் பேச முடியிலேப்பா! அடடா! அந்த விழாவிலே வந்திருந்த புறாக்கள், கிளிகள், வானம்பாடிகள், வாத்துகள் எல்லாம் உன்னையே வைத்த விழி வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தனவே — உனக்குத் தெரியுமா?"

—இது பாலுவின் குறும்பு!

"உம்! அவன் எங்கே பார்த்திருக்கப் போறான்? அவனுக்குத்தான் பெண்களைக் கண்டாலே தலைதொங்கிப் போயிடுமே!"

—இது ராமுவின் கேலி !

"டேய்! இன்பா! உன் அழகு மட்டும் எனக்கு இருந்திருந்தா, தசரதன் அறுபதாயிரம் பெண்களைக் கல்யாணம் செய்து கிட்டானே அதையெல்லாம் தவிடு பொடியாக்கி நான் ஆறு லட்சம் பெண்களைக் கல்யாணம் செய்து கிட்டிருப்பேன்"

இது வேணுவின் கூற்று !

"ஏண்டா, இன்பா! அந்த விநோதினி ஒரு நாள் உன் ஆபீஸ் அறைக்கே வந்து உன் கற்பைக் கெடுத்துவிடப் பார்த்தாளாமே !"

"பிரியா, உனக்கு எழுதி வச்சிருந்த காதல் கடிதத்தை மானேஜிங் டைரக்டர் பாத்துட்டாராம்! பிரியா, மன்னிப்புக் கேட்டும் நடக்கலியாம். பிறகு அவரோட மாமல்லபுரம் போவதற்குச் சம்மதிச்ச அப்புறம்தான், அவர் கோபமே அடங்குச்சாம்! உன்னால நம்ப மானேஜிங் டைரக்டருக்கு அடிச்ச யோகத்தைப் பாரு!"

"இன்பா! வாழ்க்கையின் தத்துவமே உனக்குப் புரியவில்லை. இறக்கை முளைத்தவுடன் பறவை கூட தன் இஷ்டத்துக்குப் பறக்க ஆரம்பித்து விடுகிறது. அதைப் பார்த்தாவது நாம் பாடம் கற்றுக்கொள்ள வேண்டாமா?"

இப்படி இன்பசாகரனின் இரு செவிகளிலும் அவனது நண்பர்கள் சங்கு ஊதினர். வழக்கமாக ஊதுகிற சங்குதான் என்றாலும், அன்று சற்று அதிகமாகவே ஊதினார்கள்.

"நீங்கள் இறகு முளைத்த பறவைகள் பறப்பதைத்தான் கண்டிருக்கிறீர்கள்! கூட்டுக்குள் இருக்கும் பறவைக்குத் தாய்ப்பறவை இரை கொண்டு வந்து தருவதைக் கண்டதில்லை போலும்!" இப்படி ஒரு பதிலைச் சொல்லிவிட்டு இன்பசாகரன் சிரித்தான்.

"ஓ! அது போல உன் தாயாரோ தகப்பனாரோ, ஒரு பெண்ணைப் பிடித்துக் கொண்டு வந்து, இந்தக் குஞ்சுப்பறவையின் கூட்டிலே விடவேண்டுமாக்கும்"

விவேக், இப்படிக் கூறியதும் எல்லா நண்பர்களும் குலுங்கக் குலுங்கச் சிரித்துவிட்டார்கள்.

"ஏண்டா இன்பா! எனக்கு ஒரு சந்தேகம்? கேட்கிறேனேன்னு தப்பா எடுத்துக்காதே! உனக்கு ஆண்மை இருக்குதா—இல்லே; அப்படி ஏதாவது கோளாறு?" என்று வேணு தனது வழக்கமான வெகுளித்தனத்தோடு கேட்டுவிட்டான்.

இன்பசாகரனின் முகம் இரத்தச் சிகப்பாகியது; ஆத்திரம் பொங்கிட வேணுவின் கன்னத்தில் ஓங்கிக் குத்திவிட்டான். விளையாட்டு வினையாகி விடக் கூடாதேயென்று மற்ற நண்பர்கள் குறுக்கிட்டு இன்பசாகரனை அமைதிப்படுத்தினார்கள். இன்பசாகரனின் உள்ளத்தை, வேணு வீசிய கணை துளைத்துக்கொண்டேயிருந்தது.

"நண்பர்கள் என்றால் பேசுவதற்கும் ஒரு எல்லை இருக்கவேண்டும். எனக்கு உங்களைப் போல அழகிகளை இழுத்துக் கொண்டு போய் கடற்கரையில் ஆட்டம் போடத் தெரியாது! அதற்காக எது வேண்டுமானாலும் பேசி விடுவதா? கூப்பிட்ட பெண்களின் பின்னால் எல்லாம் நான் போகவில்லை என்பதற்காக, குருட்டுத்தனமாக எதையாவது உளறுவதா? கலியாணம் என்பது ஒருநாள் கூத்தல்ல! எனக்கு யாரைக் காதலிக்க வேண்டுமோ அவளைக் காதலிக்கத் தெரியும். அவளையே மணக்கவும் தெரியும்! உங்களைப் போல ஊதாரித்தனமாக ஊர்ப்பெண்களோடு சுற்றத் தெரியாது!"

மளமளவென்று சொற்களைச் சிந்திவிட்டு, இன்பசாகரன் தன் அறைக்குச்சென்று அலுவலகவேலைகளில் ஈடுபட்டுவிட்டான். அவன் உள்ளம், வேலைகளில் ஒத்துழைக்கவில்லை; நாலரை மணிக்குக் கண்ணம்மா வருவதாகச் சொல்லியிருந்தாளே; அதை நினைத்தே வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

சரியாக நாலரை மணிக்கு அவள் வந்துவிட்ட செய்தியை அலுவலக ஊழியர் மூலம் அவன் அறிந்து கொண்ட பிறகும், அரைமணி நேரம் அவன் அவளைப் பற்றிய சிந்தனையிலேயே ஆழ்ந்திருந்தான். அவளை அழைத்துக்கொண்டு கடற்கரைக்குப் போக வேண்டும். அங்கு

உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்க வேண்டும். அப்போது வழக்கமாக கடற்கரைக்கு வரும் அவன் நண்பர்கள் வருவார்கள். அவர்கள், தானும் ஒரு காதலியுடன் கடற்கரையில் பொழுது போக்குவதைப் பார்த்துவிட்டு வியப்படையவேண்டும். இனிமேலாவது அந்த நண்பர்களின் வாயை அடைக்க வேண்டும்.

இப்படி ஒரு திட்டம் போட்டுக் கொண்டுதான் அவன், அவளை அழைத்துக்கொண்டு கடலோரம் வந்திருநதான். ஆனால் அவன் எண்ணியவாறு அந்த நண்பர்கள் இன்னும் வரவில்லை. அந்தப் பெண்கள்தான் வந்தார்கள். நல்ல வேளையாக அவனையும் அவளையும் பார்க்காமலே சென்றார்கள்.

இருந்தாலும் இன்பசாகரனுக்குப் பயம்; அந்தப் பெண்கள் திரும்பவும் தான் இருக்குமிடத்திற்கு அருகே வரக்கூடுமென்று! அவர்கள் கண்ணில் படாமல் தப்பவேண்டும். அதே சமயம் அவனது நண்பர்களுக்குக் கண்ணம்மா சகிதம் காட்சி தரவேண்டும். இதற்கு ஒரு வழி கண்டுபிடித்தான்.

"அந்தப் படகுப் பக்கம்போய் உட்காரலாமே!" என்று அவளை அழைத்தவாறு எழுந்தான். பத்துப் பதினைந்து அடி இடைவெளி விட்டு உட்கார்ந்திருந்த நிலைமாறி, படகுப்பக்கம் போய் உட்காருகிற வாய்ப்பு கிட்டுகிறதே என்ற உற்சாகம், கண்ணம்மாவின் உடலைச் சூடாக்கிற்று.

இருப்பினும் எளிதிற் கிட்டுமோ என எண்ணிய ஒரு பொருள், இவ்வளவு விரைவாகக் கிட்டுகிறதே என நினைத்தபோது கண்ணம்மாவுக்கு இன்பசாகரனைப் பற்றி உயர்ந்த எண்ணம் எழுவதற்கு இடையே ஒரு தடைக்கல் விழுந்தது. அந்தத் தடைக்கல்லும் சில நொடிகளில் சுக்கு நூறுகி, அவள் இதயம் பூரிப்பால் விம்மியது.

படகின் மறைவில் போய் உட்கார்ந்தார்கள் என்றாலும், அவன் அவளை விட்டு ஐந்தாறு அடி தொலைவு தள்ளியே உட்கார்ந்து கொண்டான். அவனுடைய கண்ணியமான செயலை, கண்ணம்மா பாராட்டினாள் தன் மனதிற்குள்ளாக! ஆனால் அதே சமயம்!

"அய்யோ அவன் அருகில் நெருங்கி உட்காரவில்லையே!" என்பதற்காகவும் வேதனைப்பட்டுக் கொண்டாள்.

கோரிய பொருள் விரைவாகக் கிடைத்தால் மலிவான பொருள் என்பதும், மிகுந்த இடையூறுகளுக்கிடையே கிடைக்காமற் போனால் அவ்வளவு கிராக்கியா, என்று அலுத்துக் கொள்வதும் மனித இயல்புகளில் ஒன்றுதானே! அதற்கு கண்ணம்மா மட்டும் விதிவிலக்காக இருக்க முடியுமா?

இன்பசாகரன், கண்ணம்மாவின் குடும்ப வரலாறு பற்றி விளக்கமாகக் கேட்டறிந்து கொண்டான். அவள்



தன்னைப் பற்றியும், தன் குடும்பத்தைப் பற்றியும் மிகுந்த ஆர்வத்தோடு விவரித்துக் கொண்டிருந்தது உண்மைதான். ஆனால் இன்பசாகரனின் கவனம் முழுதும், அவன் நண்பர்கள் வந்து இந்தக் காட்சியைக் காணவேண்டுமே என்பதில் தான் ஆழ்ந்திருந்தது. கண்ணம்மா, தனக்கு இலக்கியத்தில் உள்ள ஈடுபாடுகளையெல்லாம் அவனுக்கு எடுத்துக் கூறுவதில் தனி இன்பம் கண்டாள். அவனுக்கும் இலக்கியத்துக்கும் எவ்வளவு தொடர்பு என்பதை இறந்து போய்விட்ட கவிஞரய்யா தானே எழுந்து வந்து வெளியிட வேண்டும்? கண்ணம்மா விடம், தனது இலக்கிய அறிவு எவ்வளவு என்பதைக் காட்டிக் கொடுத்துவிடாதபடி மிக எச்சரிக்கையாக வார்த்தைகளை அளந்து பேசிக் கொண்டிருந்தான்.

''நிறைகுடம் நீர் தளும்பாது'' என்ற பழமொழிக்கு எடுத்துக்காட்டாக இன்பசாகரன் இருப்பதாகக் கண்ணம்மா கருதிக் கொண்டாள்.

இருள் சூழத் தொடங்கி விட்டது. படகின் நிழலில் அவர்கள் இருந்ததை மிக நெருக்கமாக நடந்து வருகிற யாராவது தான் பார்க்க முடியும். கடற்கரைச் சாலையில் இருந்த விளக்குகளின் ஒளியைத் தவிர, நிலவோ, விண்மீன்களோ ஒளி சிந்த அன்றையதினம் வரவில்லை.

எப்படியும் நண்பர்கள் அந்தப் பக்கம் வருவார்கள். அவர்கள் தன்னையும் அவளையும் பார்க்கா விட்டாலும் நாமாவது கைதட்டி அவர்களைக் கூப்பிட வேண்டும் என்ற முடிவோடு இருந்தான் இன்பசாகரன்.

''சூடான முறுக்கு, சுண்டல், கடலை—'' இப்படிக் குரல் கொடுத்துக் கொண்டு வந்த சிறுவன், அவர்களுக்கிடையே வந்து நின்று கொண்டான.

கடற்கரையில் இணைகள் இருக்குமிடத்திற்குச் சென்றால்தான் வியாபாரம் விரைவில் முடியும் என்பது அந்தச் சிறுவர்களுக்கு அனுபவ ரீதியாகத் தெரியும். எதையாவது வாங்கிக் கொண்டு அந்தத் தடையை நீக்கினால் போதுமென்று அந்த இணைகள் எண்ணுவதை எப்படியோ அந்தச் சிறுவர்கள் புரிந்து கொண்டிருந்தார்கள். இன்பசாகரன் இரண்டு கடலைப் பொட்டலங்களை வாங்கிக் கொண்டு சிறுவனிடம் காசு கொடுத்து அனுப்பிவைத்தான்.

ஒரு பொட்டலத்தைத் தன்னிடம் கொடுப்பதற்கு அவன் நெருங்கி வரத்தான் போகிறுன் என்ற 'கிளுகிளுப்பு' உணர்ச்சி உந்தியெழ, கண்ணம்மா, மணற்பரப்பைக் கையால் கிளறிக் கொண்டிருந்தாள். "கடலே சூடா இருக்கு சாப்பிடு!" என்று அவளிடம் நீட்டினுன். அவளும் அவன் பக்கம் நகர்ந்தாள். அவனும் அவளருகே நகர்ந்தான்.

பொட்டலத்தை வாங்கும்பொழுது இருவர் விரல் களும் மெல்ல உராய்ந்து கொண்டன. கண்ணம்மாவின் மேனி மீட்டப்பட்ட வீணையென இசையுடன் அதிர்ந்தது.

"சூடா இருக்கா?" என்று அவன் கேட்டான்!

"ம்" என்ருள் நாணத்துடன்!

அவன் கேட்டது கடலேயைப் பற்றி! அவள்சொன் னது தன் உடலேப்பற்றி!

படகின் மறுபுறத்தில் சதங்கை ஒலிப்பது போல வும், வளேயல் கடையில் கற்கள் வீசப்பட்டதைப் போலவும் சிரிக்கின்ற ஒலி கேட்டது. அதே பெண்கள்தான்! மணல் வெளியில் எங்கெங்கோ சுற்றிவிட்டுத் திரும்பி வந்து அந்தப் படகின் மறுபுறத்தில் உட்கார்ந்து கொண்டு அரட்டை அடிக் கத்தொடங்கிவிட்டார்கள். அவர்கள் ஒருவரையொருவர் பெயர் சொல்லி அழைத்துக் கொண்டதிலிருந்தும் — குரல் ஒலியிலிருந்தும்—அவர்கள் பேசிக்கொண்ட விஷயங்களில் இருந்தும்—அதே "குமரிக்குழு" தான் என்பது இன்பசாகர னுக்குத் தெரிந்துவிட்டது.

அவனும், கண்ணம்மாவும் இருப்பது தெரியா மல் படகு மறைத்துக் கொண்டிருந்தது. குமரிக் கூட்டத் தின் சொற்பொழிவு, கவியரங்கம், பட்டிமன்றம், மகாநாடு, தீர்மானம், அனைத்தையும் இன்பசாகரனும் கண்ணம்மா வும் கேட்டுக் கொண்டிருந்தனர்

"கொஞ்சம்கூட அடக்கமில்லாத பெண்கள்" என்று மெல்லிய குரலில் சொன்ஞன். கண்ணம்மா அது கேட்டு முகம் மலர்ந்ததை அவன் கவனிக்க தவறவில்லே.

இன்பசாகரன், கடலேப் பொட்டலத்தைக் காலி செய்துவிட்டான். "உம்! கொஞ்சம் சாப்பிடுங்கள்!" என்று தன் கையில் உள்ள கடலேகளே அவன் கையில் தந்தாள் கண்ணம்மா!

இப்போது விரல்கள் மட்டுமன்றி கரங்களும் ஒன்றோடொன்று பதிந்து விடுபட்டன. குமரிக்கூட்டம் உரத்த குரலில் பேசியதை இன்பசாகரனும் கண்ணம்மாவும் கேட்க முடிந்தது.

''என்னடி ஆச்சு! இன்பசாகரன்மீது நீ எடுத்த படையெடுப்பு! வெற்றியா? தோல்வியா?''

''வெற்றியுமில்லே — தோல்வியுமில்லே! முற்றுகை யோடு நிற்கிறது''

''நான் முற்றுகையை வாபஸ் வாங்கிக்கொண்டு வேறு பக்கம் படையெடுக்க முடிவு செய்துவிட்டேன் பாமா!''

''என்னடி ராதா! நாங்கள் ரெண்டு பேரும் உண்மையை உளறிகிட்டு இருக்கிறோம். நீ வாயை மூடிக் கிட்டு இருக்கே! நீகூட ஒருநாள் இன்பசாகரன் கிட்ட போனில் பேசினயாமே! என்ன ஆச்சு? காயா? பழமா?''

''கஜினி முகமது மாதிரி பதினேழு தடவை படையெடுத்துப் பாத்தாச்சு! சோமநாதபுரம் கோயில்கூட உடைஞ்சுது! அந்த இன்பசாகரன் இதயம் கரையமாட் டேங்குதே !''

''ஏண்டி அநாவசிய முயற்சி? நான் கூட கால் கடுக்க நடந்து பாத்துட்டேன். போனில் காதல் கீதமும் பாடிப்பார்த்துட்டேன். இது சரிப்பட்டு வராதுங் கிற முடிவுக்கு வந்து, முற்றுப்புள்ளி வச்சிட்டேன்''

''ஓகோ! நீயும் எங்க வரிசையிலே ஒருத்தியா? ஏன் கீதா! அதுக்குள்ளே ஏன் முற்றுப்புள்ளி வச்சிட்டே?''

'' அப்படீன்னு — என்னடி கீதா சொல்றே? ''

''ஆமா, இவளுக்கு இன்னும் வெளிப்படையாச் சொல்லணும்! அதாவது அந்த ஆள் ஆண்மையில்லா தவர்! போதுமா?''

'' அப்படியா? அப்படியா? அப்படியா? அட உண்மையா? நிஜமாவா சொல்றே...'' இப்படிக் கேள்வி களும் கேலிச் சிரிப்பும் மாறி மாறி ஒலித்து இன்பசாகர னைத் திக்குமுக்காட வைத்தன.

கண்ணம்மாவின் முகமாறுதல்களையும் அவன் பார்த்தான். எதிரேயிருந்த கடல், விண்முட்ட எழும்பி, அவனை அலைக்கரங்களால் அடித்து வீழ்த்துவது போல் இருந்தது.

"கண்ணம்மா! சின்னப்பிள்ளையில் நரிக்கதை படித்திருக்கிறோம் அல்லவா? தனக்குக் கிடைக்காத திராட்சையை "சீ! இது புளிக்கும்!" என்று நரி, கூறியதே நினைவிருக்கிறதா?"

இன்பசாகரனைப் பார்த்து கண்ணம்மா "நினைவிருக்கிறது" என்றாள். அப்போது அவள் குரல் கரகரத்துத் தழுதழுத்து ஒலித்தது.

இன்பசாகரன், எழுந்தான். அவளும் எழுந்து நின்றாள். பாராட்டு விழாவுக்குத் தேதி சொல்லவில்லையே என்று ஞாபகப்படுத்தினாள்.

"இரண்டு தேதியில் எந்தத் தேதி வேண்டும்? பாராட்டு விழா தேதியா? அல்லது நமது மணவிழாத் தேதியா?"

இப்படி ஒரு வினா அவனிடமிருந்து எழும் என்று எதிர்பாராத நிலையில் கண்ணம்மா அப்படியே சிலைபோல நின்றுவிட்டாள். இன்பசாகரனின் கை, அவளது தோள் மீது தாவியது. அவள் அதைத் தடுக்கவில்லை. அவள் தோளில் கை போட்டவாறே நடக்க ஆரம்பித்தான்.

படகின் மறுபுறம் இருந்த பாவையர்கள் பார்வையில் படும் வண்ணமாக அவர்கள் நடந்து சென்றார்கள். கடற்கரையில் காதலர்கள் அவ்வாறு நடப்பது வழக்கம் தான் எனினும், இன்பசாகரன் கண்ணம்மாவை அணைத்தவாறு அந்தக் குமரிகள் கூட்டத்திற்கு நடுவே நுழைந்து சென்றான்.

அப்போதுதான் அவனைப் பற்றிக் கேலி புரிந்து சிரித்து மகிழ்ந்து கொண்டிருந்த அந்தக் குமரிகள் சபிக்கப்பட்ட ஊமைகளைப் போல் அசைவற்று இருந்தனர்.

ஒருத்தி மட்டும் துணிவை வரவழைத்துக் கொண்டு, "அடடே! இன்பசாகர்! வணக்கம்! வணக்கம்! யார் இது? உங்க மனைவியா?" என்று கேட்டாள்.

"மனைவியாகப் போகிறவள்! மணவிழாப் பத்திரிகை வரும்! எல்லோரும் வந்து சேருங்கள்!' என்று கூறியவாறு இன்பசாகரன், கண்ணம்மாவுடன் காருக்குச் சென்றான்.

குமரிகள், ஏக்கப் பெருமூச்சு விட்டவாறு ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர்.

"சரியான அணிலடி அவள்!" என்றாள் ராதை, கண்ணம்மாவை சுட்டிக்காட்டி!

"ஆமாம்! ஆமாம்! மரத்தில் உள்ள கொய்யாப்பழத்தைப் பறிக்கக் கீழே நின்றுகொண்டு தொரட்டி போட்டுப் பார்ப்போம்! இல்லாவிட்டால் மரத்திலேறிப் பறிக்க முனைவோம்! அதற்குள் ஒரு அணில் வந்து அந்தக் கொய்யாப் பழத்தைக் கடித்துத் தின்றுவிடும்!" என்றாள் பாமா!

விரக்தியான சூழ்நிலையில் குமரிக் கூட்டம் கலைந்தது.

காரின் பின்புற இருக்கையில், இன்பசாகரனும் கண்ணம்மாவும் அமர, கார் கடற்கரையை விட்டுப் புறப்பட்டது. காரில் இருவரும் நெருக்கமாக உட்காரவில்லை. அது அவனது கண்ணியத்தைக் காட்டும் அடையாளம் என்ற முடிவு, அவள் இதயத்தில் பதிந்து விட்டது.

கார், கண்ணம்மா வீட்டு வாயிலில் நின்றது.

"நீயும் உன் தாயிடத்தில் பேசு! நானும் என் பெற்றோரிடம் பேசுகிறேன்! கவலைப்படாதே; நம் எண்ணம் கைகூடும்"

இன்பசாகரன், அவளை இறக்கிவிடும்போது கூறிய ஆறுதல் வார்த்தைகளால் கண்ணம்மாவின் ஆனந்தம் அணையுடைத்து எழும் வெள்ளமாயிற்று. விழிகளால் அவனுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு, வீட்டுக்குள் நுழைந்தாள் கண்ணம்மா.

"அம்மா! என் விருப்பம்போல் ஒருவருக்கு என்னை மணமுடித்து வைப்பதா சொல்லியிருக்கீங்க இல்லையா? அந்த அதிர்ஷ்டம் எனக்கு வந்துட்டுதுன்னுதான் நினைக்

கிறேன் அம்மா. எப்படி ஒரு கண்ணியமான கணவன்—கட்டழகு கொண்டவன் — கலைத்துவம் வாய்ந்தவன்—என் வாழ்க்கையில் வாய்க்க வேண்டுமென்று கனவு கண்டேனே, அது நிறைவேறும் காலம் வந்துவிட்டது. நீங்க மனசு வைக்க வேண்டியதுதான் பாக்கி!

கவிதைப் போட்டியில் பரிசு பெற்ற ஒருத்தருக்கு எங்கள் இலக்கியக் கழகத்திலே பாராட்டு விழா நடத்தத் தேதி கேட்கப்போறேன்னு சொல்லிக் கொண்டிருந்தேனல்லவா? அதற்காக அவரைச் சந்தித்தேன். அம்மா! அவரைத் தனக்கே சொந்தமாக்கிக் கொள்ள வேண்டுமென்று எத்தனை பெண்கள் தவிக்கிறார்கள் தெரியுமா? அவர் ஒரு இலட்சியவாதி. அதனால் அவர், தன்மீது ஆசைகொண்ட பெண்கள் மீதெல்லாம் தானும் ஆசை கொள்ள வேண்டுமென்ற கயமைச் செயலைச் செய்யவே இல்லை. வீட்டார் பார்த்து நிச்சயிக்கிற மணவாழ்க்கைதான் சிறந்தது என்று கருதுகிறவர். அவரிடம் நீண்ட நேரம் பேசுகிற சந்தர்ப்பம் கிட்டியது.

என்னிடம் முறை தவறி அவர் நடந்து கொள்ளவுமில்லை; பேசவுமில்லை. அவர் ஒரு இலக்கிய அறிஞர் அல்லவா? அதனால் எனது இலக்கிய ஈடுபாடு அவருக்கு ரொம்பவும் பிடித்துவிட்டது. எனவே நேரடியாகவே என்னிடம் திருமணம் பற்றிக் கேட்டுவிட்டார். கேட்டதோடு நிற்கவில்லையம்மா! உனக்கு விருப்பமிருந்தாலும்கூட உன் தாயாரைக் கேட்காமல் எதுவும் நடக்கக் கூடாது. முதலில் அம்மா சம்மதத்தைப் பெறு! நானும் எனது பெற்றோரிடம் பேசுகிறேன், என்று அவர் நிதானமாகக் கூறியது, அவரை ஒரு சிறந்த மனிதர் என்றே எடுத்துக் காட்டுகிறது''

கண்ணம்மாவிடம், இதற்கு மேலும் விபரங்கள் அறிந்து கொள்ள விரும்பாத தாயார் நீலாம்பிகை அம்மாள், மகளைத் தழுவிக் கொண்டு, ''என் கண்ணு! உன் மனம் போலவே மாங்கல்யம் கிடைக்கட்டும்! உன் ஆசைக்குக் குறுக்கே நான் நிற்கவே மாட்டேன். கல்யாண ஏற்பாடுகள் நாளைக்கே ஆரம்பமாயிடும். முதல்ல மாப்பிள்ளை வீட்டார் அபிப்பிராயத்தையும் தெரிந்து கொள்

வோம். எல்லாம் நல்லபடியா நடக்கும்னு தான் நம்பு றேன்'' என்று ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள்.

அரியநாயகமும், காமாட்சியும் மகன் திரு மணம் செய்து கொள்ள சம்மதித்துவிட்டான் என்ற சேதி கேட்டு பெருமகிழ்ச்சி அடைந்தார்கள்!

''பெண் வீடு, பெரிய பணக்கார இடம் — ஒரே பெண் தான்! நிறையச் சொத்து இருக்கு. அவனும் ஆசைப்பட்டுட்டான். அப்புறம் என்னங்க? கல்யாணத்தை முடிச்சுட வேண்டியதுதானே'' —என்றுள் காமாட்சி!

இரு வீட்டார் சம்மதமுடன் இன்பசாகரன்; கண்ணம்மா திருமணம் நிச்சயமாயிற்று. இலக்கியச் சான்றுகளையெல்லாம் எடுத்துக்காட்டித் திருமண விழா; பழங்காலத்துத் தமிழ் முறைப்படிதான் நடக்க வேண்டு மென்று கண்ணம்மா, இன்பசாகரனுக்கு ஒரு கடிதம் எழுதினுள். அந்தக் கடிதம் உரிய பயனைத் தரவில்லை.

இலக்கியங்கள், படிக்க — எழுத — பேசப் பயன் படுமேயன்றி நடைமுறைக்கு ஒத்துவருவது என்பது இயலாது; ஆகவே என் பெற்றோர் இஷ்டப்படி புரோகிதத் திருமணம்தான் நடத்திக் கொள்ள முடியும் என்று இன்ப சாகரன், அவளுக்குப் பதில் எழுதிவிட்டான். கண்ணம்மா வுக்கு, அந்த ஒரு விஷயத்தில் மனநிறைவு இல்லையென்றுலுங் கூட இன்பசாகரனை மணக்கப் போகிறோம் என்ற பெருமையில், தன் வாதத்திற்கு முக்கியத்துவம் கொடுக்க வில்லை.

திருமண விழாவிலும், இசை நிகழ்ச்சி, நடன நிகழ்ச்சிகளோடு நடைபெற்ற வரவேற்பு விழாவிலும் மணமக்கள் ஜோடிப் பொருத்தத்தைப் பாராட்டாதவர் களே இல்லை! பெண் நிறம் மாப்பிள்ளையோடு ஒப்பிட முடியாதது என்றுலும் அவளது கண்ணழகு எல்லாக் குறை களையும் போக்கடித்து விட்டது என்ற ஒரே சீரான விமர்சனம்தான் மணப்பந்தல் முழுதும் நடைபெற்றது.

இன்பசாகரனின் நண்பர்கள் பாலு, வேணு; ராமு, விவேக்—அன்றுநாள் முழுதும் திருமண விழாவிலேயே

கழித்தார்கள். இன்பசாகரனுக்குக் காதல் மனு போட்டு ஏமாந்த குமரிகளின் கூட்டமும் ஆங்காங்கு சிறுசிறு குழுக்களாகக் கூடி, மணவிழா நிகழ்ச்சி கண்டனர். அவர்களது ஏமாற்றத்தை எவ்வளவோ முயன்றும் மறைத்துக் கொள்ள முடியவில்லை. கடற்கரையில் படகுக்குப் பின்புறம் அமர்ந்து கேலி பேசிய பெண்களும் சிறப்பாக அழைப்பிதழ் பெற்றிருந்தார்கள் போலும். அவர்களும் மணமக்களை அருகில் வந்து வாழ்த்தினர். அவர்கள் முகம் மட்டும் கறுத்திருந்தது.

நண்பர்களிடமும், குமரிக்கூட்டத்திடமும் இன்பசாகரன், தலைநிமிர்ந்து கம்பீரமாகப் பேசிக் கொண்டிருந்தான். அவர்களுடைய கேலிக்கும், கிண்டலுக்கும் இழிமொழிக்கும், ஏளனத்திற்கும் செயல்மூலம் பதில் அளிப்பது தானே இந்தத் திருமணம் என்று அவன் தனக்குள்ளாகப் பெருமைப்பட்டுக் கொண்டான்.

மாலை வரவேற்பு நிகழ்ச்சியின் போது மண மண்டபத்து முகப்பில் அலங்கரித்து நிறுத்தப்பட்டிருந்த இன்பசாகரனையும் கண்மணியையும் ஜோடி ஜோடியாக இளம் தம்பதிகள் வந்து வாழ்த்தினர். அவனது நண்பர்கள் குழுவில் முக்கியமானவர்களான பாலுவும், வேணுவும் திருமணமாகாதவர்கள். விவேக்கும், ராமுவும் ஓராண்டுக்கு முன்பு தான் மணம் முடித்துக் கொண்டவர்கள்.

ராமு, மாலையில் தன் மனைவியுடன் இன்பசாகரன் தம்பதிகளை வாழ்த்தி ஒரு வெள்ளிக்கெண்டியைப் பரிசாகக் கொடுத்தான். விவேக்கும், மாலை நிகழ்ச்சிக்குத் தன் மனைவியை வரச் சொல்லியிருந்தான். அவன் இன்பசாகரன் கையில் ஒரு அட்டைப்பெட்டியைக் கொடுத்து வாழ்த்தினான் தனது மனைவியுடன் இணைந்து!

அருகிலிருந்த நண்பர்கள், ''என்னடா அது அட்டைப் பெட்டியில் ரகசியமான பரிசு?'' என்று கேட்டுக் கொண்டே பெட்டியைக் கிழித்தனர். வெள்ளியினால் செய்யப்பட்ட ஒரு வான்கோழியின் சிலை அது!

''ஏற்கனவே, இன்பசாகரனுக்கு கவிஞர் மன்றத்துப் போட்டியில் வெள்ளி மயில் பரிசு கிடைத்திருக்கிறது. இந்த வான்கோழிச் சிலையை அதன்

அருகில் வைத்தால் இரண்டும் பொருத்தமாக இருக்கும். அந்தக் கவிநயத்தோடு இப்படி ஒரு பரிசு வழங்கினேன்'' என்றான் விவேக்!

சூழ இருந்தோர் அனைவரும் மகிழ்ந்தனர் என்றாலும் கூட, இன்பசாகரனால், அவ்வளவாக அந்த விளக்கத்தை ரசிக்க முடியவில்லை. வான்கோழிச் சிலையை கண்ணம்மா கையில் கொடுத்தான். அவள், அந்தச் சிலையின் நுணுக்கமான வேலைப்பாடுகளைக் கண்டு களித்தவாறு அருகே வைத்தாள். மணமக்களுக்குத் தரப்படும் பரிசுப் பொருட்களை பத்திரப்படுத்தி ஒழுங்குபடுத்தும் பணியில் கறுப்பன் சுறுசுறுப்பாக இருந்தான்.

கண்ணம்மா திருமணம் வெகு விமரிசையாக முடிந்தது என்று பெண் வீட்டைச் சேர்ந்தோர் புகழ்ந்தனர். 'அரியநாயகம்னா அரியநாயகம்தான்! அற்புதமாக நடத்திவிட்டார், மகன் திருமணத்தை!' என்று மாப்பிள்ளையின் உற்றார் உறவினர்களும் போற்றினர்.

முதலிரவு என்றைக்கு? தேனிலவு எப்போது? இந்தக் கேள்விகளை இன்பசாகரனின் நண்பர்களும், கண்ணம்மாவின் தோழிகளும் இருவரிடமும் கேட்காமல் விடுவார்களா?

முதலிரவுக்குத் தனியாக ஒருநாள் பார்த்திருப்பதாகவும், அந்த நாள்தான் மாப்பிள்ளை ஜாதகத்துக்கும், பெண்ணின் ஜாதகத்துக்கும் பொருந்துவதாக இருப்பதாகவும் காமாட்சியம்மாள், நீலாம்பிகையம்மாளிடம் கூறினாள்.

நாள், நட்சத்திரம், ஜாதகம் போன்ற வைதீக நம்பிக்கையில் இரண்டு வீட்டுப் பெற்றோர்களும் அழுத்தமான பிடிப்புள்ளவர்கள். பஞ்சாங்கத்தைப் புரட்டிப் பார்த்து அடுத்த பத்தாவது நாள் இரவுதான் அருமையான நட்சத்திரம் — அறுபது நாழிகையும் அமிர்தயோகம் என்று முதலிரவுக்கான தேதியைக் குறித்தனர். அதுவரையில் கண்ணம்மா, தாய் வீட்டில் இருக்கவேண்டுமென்றும் ஏற்பாடாயிற்று.

"இந்தக் காலத்துப் பிள்ளைகளை எப்படி, நம்ப முடியும்? நாம் கஷ்டப்பட்டு நாள் பார்த்து

நல்ல நேரத்தில் நடக்க வேண்டுமென்று கணித்து வைத்திருப்போம். அதுகள் நம்ப கண்ணில் மிளகாய்ப் பொடியைத் தூவிட்டு ஏதாவது பண்ணிட்டுதுங்கன்னு; அப்பறம் குடும்பத்துக்கு ஆகாது பாருங்க!'' என்று நீட்டி முழக்கினுள் காமாட்சி!

''ஏற்கனவே இருவரும் சந்தித்துக் காதல் கீதல்னு கதை ஆரம்பிச்சிருக்கிற காரணத்தாலே நீங்க சொல்றதும் சரி தான். பெண்ணு, பத்து நாளைக்கு எங்க வீட்டிலேயே இருக்கட்டும்'' என்று ஆமோதித்தாள் நீலாம்பிகையம்மை!

தனக்கும், ஒரு வாரத்துக்கு ஆபீஸ் விஷயமாக பம்பாய், டெல்லி ஆகிய இடங்களில் வேலை இருப்பதாகக் கூறிவிட்டு, இன்பசாகரன், வேலைக்காரக் கறுப்பனைத் துணைக்கு அழைத்துக்கொண்டு பயணம் புறப்பட்டு விட்டான், புறப்படுவதற்கு முன்பு, கண்ணம்மாவின் வீட்டுக்குச் சென்று அவளிடம் விடைபெற்றுக் கொள்ள விரும்பினுன். அவ்வாறே சென்ருன்

பத்து நாள் பிரிந்திருக்க வேண்டும். அதுமட்டுமல்ல; தன்னை விட்டுவிட்டு வெளியூர் வேறு போகிருன் என்றதும் கண்ணம்மாவினுல் அந்தப் பிரிவுத் துயரைத் தாங்க முடியவில்லை. கணவனைக் கண்டதும் அவள் அடுக்களைக்கு ஓடிச்சென்று காபி தயாரித்துக் கொண்டு வந்து கொடுத்தாள். தன் மகளின் களிப்பை எண்ணியவாறு அவள் தாய் பூரிப்பு பொங்க நின்ருள்.

தலைவன், தன்னைப் பிரிந்து போகப் போகிருன் என்பதறிந்த தலைவி, எவ்வளவு வேதனையுற்றுக் கண்ணீர் வடித்தாள் என்பதை ஓவியமாகச் சித்தரிக்கும் குறுந்தொகைப் பாட்டொன்றை அவள் கைப்பட எழுதி வைத்திருந்தாள். அவன் புறப்படும்பொழுது அதை அவன் கையில் கொடுத்தாள், கண்களில் நீர் துளிர்க்க!

''தாமே செல்ப ஆயின் கானத்துப்
புலம் தேர் யானைக் கோட்டிடை ஒழிந்த
சிறுவீ முல்லைக் கொம்பின் தாஅய்
இதழ் அழிந்து ஊறும் கண்பனி மதர்எழில்
பூண் அக வனமுலை நனைத்தலும்
காணுர் கொல்லோ மாணிழை நமரே''

''போற்றத்தகுந்த அணிமணி பூண்டவளே! தலைவர் உன்னைப் பிரிந்து, தான் மட்டும் தனித்துச் செல்வதாக இருந்தால், காட்டில் மேயும் யானைகளின் கொம்பின் மீது முறிந்து தொங்கும் முல்லைக் கொடியினைப் போன்ற இமைகளைக் கடந்து ஊறுகின்ற கண்ணீர்த் துளிகள் உன் அழகிய கொங்கைகளை நனைப்பதைக் காண மாட்டாரா?''—என்பது அந்தப் பாடலுக்குப் பொருள்!

அதை அவன் புரிந்துகொண்டு, தன்மீது அன்பும் இரக்கமும் கொண்டு விரைவில் திரும்புவான் என்றுதான் அவனிடம் அந்தக் குறுந்தொகைப் பாட்டினை அவள் எழுதித் தந்தாள். பயணம் போகும்பொழுது, அதைப் பிரித்துப் பார்த்து ஒருமுறைக்குப் பலமுறை படித்தும் பொருள் புரியாத காரணத்தால் இன்பசாகரன், அதை மடித்துப் பையிலே வைத்துக்கொண்டான்.

பம்பாயில் ஓட்டல் ஒன்றில் தங்கி இரண்டு நாட்கள் பல இடங்களில் அலைந்து தனது அலுவலகப் பணிகளை முடித்துக்கொண்டு, மறுநாள் டெல்லிக்குப் புறப்படுவதற்குத் தயாராக பெட்டி படுக்கைகளை எடுத்து வைக்குமாறு கருப்பனிடம் கூறினான் இன்பசாகரன்.

கருப்பன், அவனது பணிகளை முடித்ததும் அவனை அழைத்துக்கொண்டு இன்பசாகரன், பம்பாய் ''மெரின் டிரைவ்''வில் கடலோரச் சுவர் ஓரமாகக் காற்று வாங்கியவாறு நடந்தான். 'மெரின் டிரைவ்' பம்பாய் நகரமெனும் மங்கையின் கழுத்தில் ஒளி உமிழும் வைர நெக்லஸ் என்னும் பட்டம் பெற்ற பகுதியாகும். நகரத்தின் சுறுசுறுப்பை அந்தச் சாலையிலும் காணலாம்.

நகரைச் சுற்றி முற்றுகையிட முனைவது போல் கடல் சூழ்ந்துள்ள அந்தப் பகுதியில் மணற்பரப்பு கொண்ட ஒரே ஒரு இடம், சௌபாத்தி கடற்கரை தானே! சென்னைக் கடற்கரையுடன் ஒப்பிடும்போது சௌபாத்திக் கடற்கரை மிகமிகச் சாதாரணம்! அந்தச் சிறிய மணற்பரப்பிலும் இப்பொழுது மரங்களை வளர்த்து கூடுமான வரையில் அதன் அழகைக் கெடுத்திருந்

தார்கள். வானைத் தொடும் உயர்ந்த கட்டிடங்களையும், நட்சத்திரங்கள் பூமியில் சிதறிக் கிடக்கின்றனவோ என எண்ணும் விதத்தில் எரிந்து கொண்டிருக்கும் மின்விளக்கு களின் அழகையும், கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டே கறுப்பன், இன்பசாகரனைப் பின் தொடர்ந்தான்.

சௌபாத்திக் கடற்கரையில் கூட்டமில்லாத ஒரு பகுதியில் போய் இன்பசாகரன் உட்கார்ந்தான். அந்தப் பக்கமாக செல்லும் ஆண்களும் பெண்களும் அவனை ஒருமுறை பார்த்து, சிறிது நின்று கவனித்து விட்டுத்தான் சென்றார்கள். புதிதாக வெளிவர இருக்கின்ற புதிய படத்தின் புதிய கதாநாயகனாக இருக்குமோ என்ற சந்தேகமோ என்னவோ; அவர்களை அவ்வாறு கவனிக்க செய்தது.

கறுப்பனை உட்காரச் சொல்லி இன்பசாகரன் வற்புறுத்தினான். அவன் தயங்கிக் கொண்டு நிற்கவே அவன் கையைப் பிடித்து இழுத்து உட்கார வைத்தான்.

''கறுப்பா! உன்னிடம் ஒரு முக்கியமான சேதி சொல்லவேண்டும். எங்கள் வீட்டு விசுவாசமுள்ள வேலைக்காரன் என்ற நம்பிக்கையில் இந்தச் சேதியைச் சொல்லப் போகிறேன். அதற்காகத்தான் உன்னை என்னுடன் அழைத்துக் கொண்டே வந்திருக்கிறேன்'' என்று இன்பசாகரன், கறுப்பனிடம் நெருங்கி உட்கார்ந்து பேசத் தொடங்கினான்.

''சின்னய்யா! என்ன சொன்னாலும் அதை ஆண்டவன் கட்டளையா எடுத்துக்குவேனுங்க! பாட்டன் பூட்டன் காலத்திலேருந்து உங்க வீட்டு உப்பைத் தின்னு வளர்ந்த குடும்பங்க எங்க குடும்பம்'' என்று கறுப்பன் பாசமும் பற்றும் பொங்க பதில் அளித்தான்.

மிக மிக மெல்லிய தொனியில் இன்பசாகரன், கறுப்பனிடம் நீண்டநேரம் பேசிக் கொண்டேயிருந்தான். கறுப்பனின், விகாரமான முகம், மேலும் விகாரமாகியது.

''சின்னய்யா! சின்னய்யா!'' என்று அடிக்கடி கறுப்பன் நடுங்கும் குரலில் அலறினான்.

சின்னய்யா, கறுப்பனின் தவடையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சியவாறு மீண்டும் பேச்சைத் தொடர்ந்தான்.

இன்பசாகரன் கூறியவற்றை ஏற்றுக்கொள்ள இயலாத நிலையில் இருப்பவனைப் போல கறுப்பன் எழுந்தான்.

இன்பசாகரனும், எழுந்து விடவே அவன் காலில் கறுப்பன் விழுந்து "வேண்டாங்க! வேண்டாங்க! இதெல்லாம் நல்லது இல்லீங்க!" என்று மன்றாடினான்.

"சீ! பைத்தியக்காரனாயிருக்கிறாயே! சரி, சரி! வா!" என்று கறுப்பனை அழைத்துக் கொண்டு சௌபாத்திக் கடற்கரையை விட்டுச் சாலையோரத்துக்கு வந்தான்.

சிறிது தூரம் நடந்து சென்று இருவரும் ஒரு பேருந்தில் ஏறிக்கொண்டார்கள். தங்கியிருக்கும் ஓட்டலுக்குத்தான் போகிறோம் என்று கறுப்பன் நினைத்துக்கொண்டிருந்தான். ஆனால் பேருந்து வேறு வழியாகப் போய்க்கொண்டிருந்தது.

பம்பாயில் ஒருவகையில் பிரசித்தி பெற்ற பகுதியாக நீண்ட காலமாகப் பேசப்படும் கிராண்ட் ரோடு, பாரஸ் ரோடு, ஆகிய சாலைகளுக்கு அருகே பேருந்து நின்றதும் அதிலிருந்து இன்பசாகரன் இறங்கினான். கறுப்பனும் அவனைத் தொடர்ந்தான்.

அரசின் அனுமதி பெற்று பகலிரவு என்று வேறுபாடு பாராமல் பணத்திற்காக—இல்லை; இல்லை; ஒருச்சாண் வயிற்றுக்காக உடலை வாடகைக்கு விடும் இந்திய நாட்டு "மாதர்குல மாணிக்கங்கள்" வாழும் பகுதி அது! வரிசையாக வைக்கப்பட்டுள்ள பறவைக் கூண்டுகளில், கம்பிகளுக்கு வெளியே அலகையோ, தலையையோ நீட்டிக்கொண்டு ஆகாரத்தை எதிர்பார்க்கும் விதவிதமான வர்ணங்கொண்ட கிளிகளைப் போலவும், புறாக்களைப் போலவும் பெண்கள், ஆண்களின் வரவுக்காகக் காத்திருப்பார்கள்.

காசியில் கங்கையாற்றில் மிதந்து செல்கிற பிணங்களைப் பற்றிக் கவலைப்படாமல்; ஏன் — அவற்றைக் கவனிக்காமலே கூட; கங்கா ஸ்னானம் செய்து கொண்டிருக்கிற பக்தர்களைப் போலவும் — தங்கள் சொந்தக் காரியங்களில் அக்கறை காட்டிக் கொண்டிருக்கிற காசி வாசிகளைப் போலவும் — இந்தத் தெருவிலே இருக்கிற கடைக்காரர்கள், சைக்கிள் ரிக்ஷாக்காரர்கள், அந்த உடல்

வாடகைக் கூடங்களில் காத்திருக்கும் பெண்களைப் பற்றி அலட்டிக் கொள்வதில்லை, அவர்களின் வாழ்க்கையைப் பற்றி அலசி ஆராய்வதுமில்லை. அவர்களுக்கும் எப்போதாவது உடற்பசி ஏற்பட்டால், கங்கையில் மிதந்தோடும் பிணத்தைக் காக்கை கழுகுகள் பறந்து சென்று கொத்துவதுபோல; அவர்களும் அந்தக் கூண்டுக்குள் நுழைந்து பசியைத் தணித்துக் கொண்டு வருவார்கள்.

அதைத் தவிர இப்படியொரு வேதனையான வாழ்க்கையில் வெந்து மடிகிற அந்த பெண்ணினத்தைப் பற்றி யாரும் எள்ளளவு துன்பங் கூட கொண்டது கிடையாது. பம்பாய் நகரின் மற்ற தெருக்களைப் போலவே இந்தக் குறிப்பிட்ட தெருக்களிலும் அன்றுட வாழ்க்கை போக்குவரத்து, கூச்சல், கூப்பாடு எல்லாம் நடைபெற்று கொண்டுதானிருக்கின்றன.

அந்தத் தெருவிலே இன்பசாகரன் கறுப்பனை அழைத்துக் கொண்டு நுழைந்தான்.

சிறைச்சாலைக் கைதிக் கூண்டுகளைப் போல் காட்சி தந்த ஒவ்வொரு வீட்டு வாசலிலும் இரண்டு மூன்று பெண்கள் நின்று கொண்டிருந்தார்கள். சிலர் அரையாடையுடன்! சிலர் இடுப்பில் ஒரு பாவாடை; மார்புக்கச்சு—தாவணியில்லாத நிலையில்! ஓரிரு பெண்கள் சிகரெட்டுகூடப் பிடித்துக் கொண்டிருந்தார்கள்! ஒரு கூண்டில் கிழிந்துபோன திரையொன்று தொங்கிக் கொண்டிருந்தது. ஆனல் அதன் கிழிசல் வழியாக உள்ளே நடக்கும் உடல் வாணிப நிகழ்ச்சி வீதியில் நடப்போருக்கு "டிரைவ் - இன் சினிமா' போல் தெரிந்து கொண்டிருந்தது.

பம்பாயிலேகூட டிரைவ் - இன் தியேட்டர் அமைந்து சினிமாக்கள் நடக்கின்றன. திறந்தவெளி தியேட்டர்! அதற்குச் சுற்றடைப்பு உண்டு! அந்த அடைப்புக்குள் நூற்றுக்கணக்கான கார்களில் இருந்தவாறே படம் பார்க்க முடியும். உள்ளே போக இயலாதவர்கள், சுற்றடைப்புக்கு வெளியே நின்று கொண்டு உயரத்தில் தெரிகிற சினிமாப் படத்தைப் பார்த்துக் கொண்டு ரசிக்கிருர்கள். ஆனல் அவர்களுக்கு எந்த

ஒலியும் காதில் விழுவது கிடையாது. மௌனப் படம் பார்ப்பது போல் பார்த்துவிட்டு நகருகிறார்கள்.

அதுபோன்ற 'டிரைவ்-இன் சினிமா' காட்சிகளைத் தெருவில் நடந்தவாறு கையில் காசில்லாத கந்தலாடை வாலிபர்கள், இந்தத் தெருக்களிலும் ரசித்துக் கொண்டு நடந்த வண்ணமிருந்தார்கள். கூண்டு வீடுகளில் இடம் கிடைக்காத பெண்கள், அவர்களுக்கு 'லைசென்ஸ்' இருக்கிற காரணத்தால் — தைரியமாக தெருக்களில் உள்ள பெட்டிக் கடைகளின் முகப்பில் நின்றுகொண்டு; ஆடவர்களுக்குத் தங்களின் அங்கங்களை அசைப்பதின் மூலம் வலைவீசிக்கொண்டுமிருந்தார்கள். தங்களுக்கு இப்படி ஒரு நிலை வந்ததே என்று கவலைப்படுகிற தன்மையில் அந்த வனிதா ரத்தினங்கள் யாரும் இருந்ததாகத் தெரியவில்லை.

மதுக்குடி என்னும் தீயபழக்கத்தை இந்தியா முழுதும் அகற்றப் போவதாக அறைகூவல்விடுகிறது அரசாங்கம்! ஆனால் "இந்தியாவின் வாயில்" என்று அழைக்கப்படும் பெருநகராம் பம்பாயில் பாவையர், தங்கள் கற்பைப் பலசரக்குக் கடையாக ஆக்கிக் கொண்டிருப்பதைப் பற்றி எந்த அரசாங்கமும் நினைத்துக் கூட பார்க்கவில்லை என்பது வேடிக்கைதான்!

தெருவில் நடக்கிற ஒருவன், கொஞ்சம் அயர்ந்து நின்றால் போதும். அவனை ஒரு பெண்ணின் கரம் இழுத்துச் சென்று கூண்டுக்குள் தள்ளும்! ஓட்டைத்திரை, வாசலை மூடும்! அவள் எடுத்துக் கொண்டது போக மிச்சத்தை எண்ணிப் பையில் போட்டுக் கொண்டு சிறிது நேரத்தில் அந்த வாலிபன், வெளியே செல்வான்.

சுப்பிரமணிய பாரதியார் மட்டும் உயிரோடு இருந்து அந்தத் தெருவின் வழியாகச் சென்றிருப்பாரேயானால்,

"பெண்மை வாழ்க என்று கூத்திடுவோமடா!
பெண்மை வெல்க என்று கூத்திடுவோமடா!"

என்று அவர் எழுதிய பாட்டை, உரத்த குரலில் அந்த வீதியில் உள்ளோர் மட்டுமல்ல; நகரில் உள்ளோர், நாட்டில் உள்ளோர் அனைவரின் செவிகளும் கிழிபடும் அளவில் ஒப்பாரிவைத்து முழக்கிக் கொண்டே நடந்திருப்பார்.

அந்தத் தெருவின் மாயா ஜாலங்களையும் மந்திர ஜாலங்களையும், மத்தாப்புக் காட்சிகளையும் கண்ட கறுப்பன், இன்பசாகரனைப் பார்த்து —''என்னங்க சின்னய்யா! எங்கே வந்துட்டோம்?'' என்று ஆவலுடன் கேட்டான். ''அதுதான் உனக்குச் சொன்னேனே அந்த இடம்! பார்! எவ்வளவு பளபளப்பா இருக்கு பார்!'' என்று பதிலளித்த இன்பசாகரன், கறுப்பன் கையில் ஒரு ஐந்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்து, ''அந்தக் கடையில் போய் ஒரு பீடா வாங்கிக் கொண்டு வா! நான் இங்கேயே நிற்கிறேன்'' என்றான். கறுப்பன் கடையை நோக்கி ஓடினான்.

இன்பசாகரன், சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, அருகேயுள்ள ஒரு கூண்டின் பக்கம் சென்றான். இடுப்புக்குக் கீழே தொடையளவு மறைக்கின்ற சிகப்பு நிற ஜட்டியுடனும் — மார்பகத்தை மறைத்தும் மறைக்காமலும் அணிந்த நீலநிறக் கச்சுடனும் ஒரு ஸ்டூலில் ''ஷோகேஸ்'' பொம்மைபோல் உட்கார்ந்திருந்த ஒருத்தி, ஓடி வந்து இன்பசாகரனின் கையைப் பிடித்து அழைத்தாள். இருவரும் கூண்டுக்குள் சென்றுவிட்டனர்.

கடையில் பீடா வாங்கிய கறுப்பன், இன்பசாகரனைத் தேடினான். காணவில்லை. எதுவும் புரியாமல விழித்துக் கொண்டு நின்றவனின் தோள் மீது ஒரு கை விழுந்தது.

''சின்னய்யா!'' என்று ஆவலோடு திரும்பினான்.

அது சின்னய்யா அல்ல! சின்னஞ்சிறு கிள்ளைகளும், புறாக்களும் சிறகடிக்கும் அந்தத் தெருவில் காக்கைகளும், கழுகுகளும் கூடப் பெண்ணுருவில் வசித்துக் கொண்டிருந்தன. அதில் ஒரு கழுகுதான் கறுப்பனைக் கொத்தித் தூக்கிக் கொண்டு தன் கூண்டுக்குள் பறந்தது.

''என்னை விட்டுவிடு! சின்னய்யா தேடுவாரு!'' என்று அவன் கத்திப் பார்த்தான்.

அவன் அனுமதியில்லாமலே அவனது சட்டையும், வேட்டியும் அகற்றப்பட்டன. அவன் கையிலிருந்த பீடாவை வாங்கி அந்தக் கழுகு தன் வாயில் ஒரு ருதப்புக் குதப்பி, அதையே அவன் வாயிலும் வைத்து அமுக்கியது.

கறுப்பன் சின்னய்யாவை மறந்துவிட்டுச் சொர்க்கலோகம் போய் விட்டான். ''நரகத்திலும் சொர்க்கமிருக்கிறது! சொர்க்கத்திலும் நரகம் இருக்கிறது!''

ஆம்; அந்தச் சொர்க்கத்தைத்தான் கறுப்பன் கண்டான்! பிறகு அந்தக் கழுகு அவன் சட்டைப் பையிலிருந்து இரண்டு ரூபாயை எடுத்துக் கொண்டு, மிச்சம் இரண்டு ரூபாயை அவன் சட்டைப்பையிலேயே திணித்து, அவனை வழியனுப்பி வைக்கத் தொடங்கியது.

ருசி கண்ட பூனை — உறியைத் தாவாமல் இருக்குமா? கறுப்பனுக்கு அன்று தானே முதல் இரவு! கழுகு போகச் சொல்லியும் அவன் போகவில்லை; தன்னிடமிருந்த மிச்சம் இரண்டு ரூபாயை எடுத்து மொழி புரியாத காரணத்தால் அந்தக் கழுகின் முன்னால் அசைத்துக் காட்டி, அத்துடன் பல்லையும் காட்டினான். வியாபாரத்தில் வெற்றி கண்ட கழுகு, அந்த இரண்டு ரூபாயையும் வாங்கி தலையணைக்குக் கீழே போட்டு விட்டு மீண்டும் கறுப்பனை இழுத்து அணைத்துக் கொண்டது.

''எங்கே சொர்க்கம்? எங்கே சொர்க்கம்? அது இங்கே உண்டு; அங்கே இல்லை!'' என்ற உடுமலையாரின் பாடலைப் பாடவேண்டும் போல் தோன்றியது கறுப்பனுக்கு! அதை நடிப்பிசைப் புலவர் ராமசாமி தனது நளினமான குரலில் பாடியது, மிக உயர்ந்த ஒரு கொள்கையைச் சொல்வதற்காக! ஆனால் அந்தப் பாடல், கறுப்பனுக்கு — அந்தச் கழுகுக்கு முன்னால் பாடவேண்டிய பாடலாக ஆனது! அந்தப் பாடலாசிரியர் செய்த பாபம் போலும்!

நான்கு ரூபாய் கழுகுக்கும், ஒரு ரூபாய் பீடாவுக்கும் போக— கையில் ஒருகாசு இல்லாமல்; ஆனால் மிகுந்த உற்சாகத்தோடும்— புத்துணர்ச்சியோடும்— கறுப்பன் வெளியே வந்தான். மீண்டும் அவனைத் திகில் கப்பிக் கொண்டது. 'சின்னய்யாவை எப்படிக் கண்டுபிடிப்பது! கையிலும் காசில்லையே, விசாரித்துக் கொண்டு ஓட்டலுக்குப் போவதற்குக்கூட' எனத் துடிதுடித்தவனாய் அந்தத் தெருவில் அங்குமிங்கும் அலைந்தான்!

''கறுப்பா.'' என்ற இன்பசாகரனின் குரல் கேட்டு. ''எஜமான்!'' என்று துள்ளிக் குதித்து அருகே ஓடி வந்தான்.

''பீடா வாங்கிட்டு வரச் சொன்னா, எங்கேடா போனே?'' என்று இன்பசாகரன் கடிந்து கொள்வது போல நடித்தான்.

''சின்னய்யா மன்னிச்சிடுங்க! ரூபாயைக்காணும அடிச்சிட்டுத் தேடிகிட்டு இருக்கேன்'' என்றான் கறுப்பன்.

இன்பசாகரனிடம், கறுப்பன் உண்மையை மறைக்க முயன்றாலும் அதை மறைக்க முடியாமல்— அவன் கன்னத்தில் கழுகின் நெற்றியில் இருந்த நீலநிறப் பொட்டு ஒட்டிக்கொண்டு அவனைக் காட்டிக்கொடுத்தது.

''இது என்னடா கன்னத்திலே அடையாளம்?'' என்று கேட்டுக் கொண்டே, அந்த நீலவண்ணத்தைக் கையில் எடுத்துக் கறுப்பனிடம் காட்டினான் இன்பசாகரன்! கறுப்பன், சமாளித்துப் பார்த்தான். இன்பசாகரன் சிரித்துக் கொண்டே கறுப்பனைத் தட்டிக் கொடுத்துச் சொன்னான்.

''கறுப்பா! எல்லாம் எனக்குத் தெரியும். ஒளிக்காதே! நான் ஒரு இடத்துக்குப் போனேன். நீ ஒரு இடத்துக்குப் போனாய். ஏய், உன்னை நானே தான் வேண்டுமென்றே அங்கு அனுப்பி வைத்தேன். சௌபாத்திக் கடற்கரையில் நான் சொன்ன போது, முடியாது என்று தலைகீழாக நின்றாயே! இப்ப எப்படி இருந்தது? ருசி கண்ட பூனை ஆகிவிட்டாயா? சரி! சரி! வா; இரண்டு பேரின் அனுபவங்களையும் ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டே ஓட்டலுக்குப் போகலாம்'' என்று இன்பசாகரன் கூறிக் கொண்டே கறுப்பனுடன் ஒரு டாக்சியில் ஏறி உட்கார்ந்தான்.

டாக்சிகாரனுக்கு தமிழ், சுட்டுப்போட்டாலும் வராது. இந்தி அல்லது மராத்தியிலேதான் பேசவேண்டும். ஓரிரு வார்த்தைகள் ஆங்கிலம் புரிந்து கொள்ளக் கூடியவனாக இருந்ததால் அவர்கள் தங்கியிருந்த ஓட்டலை நோக்கிச் சுலபமாகப் போக முடிந்தது. அந்த வழியிலேயே இன்பசாகரனும் கறுப்பனும் தங்களின் அன்றைய அனுபவங்களை ஒருவருக்கொருவர் விவரித்தனர்.

ஓட்டல் வாசலில் டாக்சியில் இருந்து இறங்கும் போது கறுப்பனின் கண்களில் நீர் துளிர்த்திருந்தது.

"ஏ, பைத்தியம்! கவலைப்படாதே!" என்று கறுப்பனின் முதுகில் இன்பசாகரன் தட்டிக் கொடுத்து விட்டு—ஓட்டலுக்குள் தன் அறையை நோக்கிச்சென்றான். கறுப்பன், அறைச்சாவியை ஓட்டல் வரவேற்பு அறையில் வாங்கிக் கொண்டதோடு, இன்பசாகரனுக்கு வந்திருந்த ஒரு உறையிட்ட தபாலையும் பெற்றுக் கொண்டு அறையை நோக்கி ஓடினான்.

இன்பசாகரன், அஞ்சலைப் பிரித்தான். அதற்குள் கறுப்பன் அறைக்கதவைத் திறந்தான்.

"கறுப்பா! கண்ணம்மா கடிதம்" என்றான் இன்பசாகரன்.

"என்னங்க எழுதியிருக்காங்க?" என்று கண்களை அகல விரித்துக் கேட்டான் அந்த விசுவாசமுள்ள வேலைக்காரன்.

"இரு! இரு! நானே படிக்கிறேன், நீயும் கேட்கலாம்!" என்று கடிதத்தைப் பிரித்து வாய்விட்டுப் படிக்கலானான்.

"அன்புள்ள அத்தான், குறுந்தொகைப் பாட்டு எழுதிக் கொடுத்தேனே; அதைப் படித்து என் நிலைமையை உணர்ந்திருப்பீர்கள் என்று நம்புகிறேன்.

திருமணமாகி முதலிரவுகூட முடிவதற்குள் இப்படி ஒரு பெண் கடிதம் எழுதுகிறாளே என்று என் மீது கோபிக்காதீர்கள்! திருமணத்திற்கு முன்பே மெரினா கடற்கரைச் சந்திப்பில் நான் என்னை உங்களிடம் ஒப்படைத்துவிட்டேன். உடல் உறவுக்கு முன்பு நம் உள்ளங்கள் உறவாடிப் பிணைந்துவிட்டன. மணவிழா முடிந்து பத்து நாட்கள் நம்மைப் பட்டினி போட்டுவிட்ட அந்தப் பழம் பஞ்சாங்கங்களை நினைத்தால் எனக்குத் தாங்க முடியாத சீற்றம் பிறக்கிறது. அந்தத் துன்பம் போதாதென்று நீங்கள்வேறு வெளியூர் பயணம் புறப்பட்டுவிட்டீர்கள்.

திருமணத்தன்றோ அல்லது மறுநாளோ நாமிருவரும் வெள்ளத்திலேயொரு வெள்ளமாய் வீணையும் நாதமுமாய் ஆகிவிட்டிருந்தால், அந்த

ஒருநாளை நினைத்து நினைத்து மனதுக்கு ஆறுதலைத் தேடிக்கொள்ளலாம்.

என்னடா இவள்! கொஞ்சம் அளவு மீறி எழுதுகிறுளே என்று நினைக்காதீர்கள்! நீங்கள் மாத்திரம்தானே படிக்கப் போகிறீர்கள். அதனுல் என்னை மன்னித்து விடுங்கள்! காவியங்களையும் கவிதைகளையும் கற்றுணர்ந்த நம்மிடையே இப்படித்தான் ''கடிதம் விடு தூதுக்கள்'' இருக்கும்! இருக்கமுடியும்! இல்லையா, அத்தான்?

வெட்கத்தால் தலையைக் குனிந்துகொண்டே கலிங்கத்துப் பரணியில் வரும் ஒரு பாட்டை உங்களுக்கு நினைவுபடுத்துகிறேன். தப்பாக நினைக்காதீர்கள். பாட்டு வேண்டாம; அது மிகவும் பச்சையாக இருக்கும். அதன் அர்த்தத்தை மட்டும் சொல்லுகிறேன். நீங்கள் அந்தப் பாடலை படிக்காமலா இருந்திருப்பீர்கள்?

உடலின்பம் அனுபவிக்கும்போது, கணவனின் நகக்குறி, மனைவியின் மார்பகத்தில் பதிந்துவிடுகிறதாம். மறுநாள் அந்தப் பெண், யாருமில்லாத இடத்தில் தன் கச்சையை அவிழ்த்து அந்த நகக் குறியைப் பார்த்துத் தனக்குள்ளாக மகிழ்கிறுளாம்! அது எப்படியிருக்கிறதாம் தெரியுமா? ஏழைக்குப் பொற்குவியல் கிடைத்தால், அதை யாரும் அறியாமல் அடிக்கடி திறந்து பார்த்து மூடிக்கொண்டிருப்பானும்! அதைப்போல இருக்கிறதாம்!

பரணி பாடிய செயங்கொண்டார், என்ன அழகான உவமையைக் கையாண்டிருக்கிறுர் பார்த்தீர்களா? அந்த ஏழைக்கு ஏற்பட்ட ஆனந்தம்கூட எனக்குக் கிடைக்கவில்லையே! பொறுத்துக்கொள் கண்ணம்மா—இன்னும ஏழெட்டு நாட்கள்தான இடையிலிருக்கின்றன என்கிறீர்களா? அந்த நாட்கள் விரைவில் ஓட அவற்றைச் சவுக்கால் அடித்து விரட்டிக்கொண்டிருக்கிறேன். நீங்களும் அதே உணர்வில் தான் இருப்பீர்கள். உடல்நலம் ஒழுங்காகப் பேணிடுக! பணி முடிந்ததும பறந்து வருக!

உங்கள் மனைவி

கண்ணம்மா''

இன்பசாகரன், கடிதத்தைப் படித்து முடித்து விட்டு கட்டிலில் படுத்துப் புரண்டான். கறுப்பன், அந்தக் கடிதத்தை எடுத்து மேசையின் மீது வைத்துவிட்டு, "சாப்பிடுவதற்கு என்ன கொண்டு வரச் சொல்ல?" என்று கேட்டான்.

"எனக்குப் பசியே இல்லை. நீ போய் சாப்பிட்டு விட்டு வந்து படு" என்றான் இன்பசாகரன்.

வற்புறுத்திப் பயனில்லை என்பதைப் புரிந்து கொண்ட கறுப்பன், கீழே சென்று உணவினை வயிறு புடைக்கத் தின்றான். அவனுக்கு அன்று அதிகமாகவே சாப்பிடத் தேவை யிருந்தது. சாப்பிட்டு முடித்ததும் அறைக்கு வந்தான். இன்பசாகரன், உறங்குவது போல் படுத்திருந்தான். கறுப்பன் வந்ததை அவன் கவனித்த தாகத் தெரியவில்லை.

கறுப்பனின் கண்கள் கண்ணம்மாவின் கடிதத் தைத் தேடின. அது மேசை மீது இல்லை. இன்பசாகரனின் தலையணைக்கருகே கிடந்தது. அதை மீண்டும் அவன் படித் திருக்கிறான் என்று கறுப்பன் யூகித்துக் கொண்டான்.

மெதுவாக அந்தக் கடிதத்தைக் கறுப்பன் ஓசைப்படாமல் எடுத்து, குளியலறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்று, அங்குள்ள விளக்கைப் போட் டுக்கொண்டு அந்தக் கடிதத்தைச் சுவையூறப் படித்தான். பிறகு, அவன் வெளியே வந்து, கடிதத்தை முன்பிருந்தது போல் வைத்து விட்டு, அந்த அறையில் தரையில் துண்டை விரித்துப் படுக்கப் போனான்.

"ஏண்டா முட்டாளே!"

இன்பசாகரின் குரல் கேட்டுத் திடுக்கிட்ட கறுப்பன்—படுக்கப் போனவன்—பதைத்துப் போய் எழுந்து நின்றான்.

"இன்னொரு கட்டில் எதற்காக இருக்கிறது? அதில் படுடா! அதற்கும் சேர்த்துத்தான் பணம் கொடுக் கிறோம்" என்றான்.

கறுப்பன் தயங்கினான்.

"நீயும் நானும் இப்போது தான் ஒரே தெரு வில் இரண்டு வீடுகளுக்குப் போய்வந்தோம். இங்கே மட் டும் ஒரே அறையில் இரண்டு கட்டில்களில் படுக்கக் கூடாதா?"

இந்தக் கேள்விக்குப் பிறகு கறுப்பன், பிடிவாதம் காட்டாமல் விளக்கை அணைத்துவிட்டு இன்னொரு கட்டிலில் படுத்துக்கொண்டான். சிறிது நேரத்திற்கெல்லாம் ஏதோ தாள் கிழிக்கப்படும் ஒலி கேட்டது. ஒன்றுமில்லை, கண்ணம்மா எழுதிய கடிதத்தைத்தான் இன்பசாகரன், கிழித்து அங்குள்ள கூடையில் போட்டான்.

பம்பாய், டெல்லி அலுவல்களை முடித்துவிட்டு இன்பசாகரன் சென்னைக்குத் திரும்பினான். விமானத்திலிருந்து இறங்குவதற்கு முன்பு, இன்பசாகரன் தன்னருகே அமர்ந்திருந்த விசுவாசமுள்ள வேலைக்காரன் கறுப்பனின் கையைப் பிடித்துக் கொண்டு, "கறுப்பா! டெல்லி ஓட்டலில் நீ எனக்குச் செய்து கொடுத்த சத்தியத்தை மறந்துவிடக் கூடாது! உன் குல தெய்வத்தின் மீது சத்தியம் செய்திருக்கிறாய்" என்று நாத்தழுதழுக்கக் கூறினான்.

"சரிங்க சின்னய்யா!" என்று கறுப்பனும் உறுதியளித்தான்.

சாஸ்திர சம்பிரதாயப்படி சாந்தி முகூர்த்தத்திற்குப் பார்த்த நாளில் ஆகவேண்டிய எல்லா ஏற்பாடுகளும் மாப்பிள்ளை வீட்டில் பெண் வீட்டார் செலவில் தடபுடலாக நடந்துகொண்டிருந்தன. இரவு ஒன்பது மணிக்குக் குறிப்பிட்ட நண்பர்கள், உறவினர்கள், சுமார் நூறு பேருக்கு விருந்தொன்றுக்கு அழைப்பும் அனுப்பப்பட்டிருந்தது.

அந்தக் குறிப்பிட்ட விருந்தில் பாலு, வேணு, ராமு, விவேக், அவர்களுடைய குடும்பத்தார் விடப்படுவார்களா என்ன? அதேபோல அன்றைக்குக் கடற்கரையில் இன்பசாகரனைப் பற்றிக் கேலிபேசிய குமரிக் கூட்டத்து அழகிகளுக்கும் அவன் தொலைபேசி மூலம் அழைப்பு விடுத்திருந்தான். தன்னுடைய ஆண்மைத்தன்மை குறித்தே அவதூறு பேசியவர்களின் ஆணவம் அடங்கவேண்டுமென்பதற்காகவே அவன் அவர்களையெல்லாம் குறிப்பாக அழைத்திருந்தான். யாரும் வரவில்லை என்ற குறையில்லாமல் அனைவரும் வந்திருந்தார்கள்.

அவர்களுக்கு முன்னால், கண்ணம்மாவின் அருகே அமர்ந்து விருந்துண்டான் இன்பசாகரன், அழுக்கழு

அவளுடன் பேசினான். பலரின் மத்தியில் அவளுக்குப் பேச நாணம் தடையாக இருந்தாலும், கணவன் பேசும் போது சும்மா இருக்க முடியுமா? அவர்கள் இருவரும் பேசுவதை அந்தக் குறும்புக்காரக் குமரிக் கூட்டம் குமுறும் நெஞ்சுடன் கவனித்து எரிமலை போல் மூச்சு விட்டுக்கொண்டது.

விருந்து முடிந்து; அனைவரும் கூடத்தில் அமர்ந்தனர். விவேக், இன்பசாகரனைப் பார்த்துத் "இன்பா! இன்றைய மகிழ்ச்சிகரமான விழாவையொட்டித் இதோ ஒரு சிறிய கலைநிகழ்ச்சி!" என்று கூறிக்கொண்டே தன் மனைவியை இழுத்துக் கூடத்துப் பளிங்குத் தரையில் தள்ளி,

"கன்னத்தில் ஒரு முத்தம்
வைப்பாய் பெண்ணே!
கருதுவதில் பயனில்லை தனியாய் நின்று!
மின்னிவிட்டாய் என் மனதில் பொன்னாய்ப் பூவாய்!
விளைந்து விட்டாய் கண் எதிரில்!
கன்னத்தில் ஒரு முத்தம்
வைப்பாய் பெண்ணே!"[2]

என்ற பாரதிதாசனின் பாடலைப் பாடினான். உடனே விவேக்கின் மனைவியும்;

"கன்னத்தில் ஒரு முத்தம்
வைப்பாய் கண்ணா!"

என்று பல்லவியை சற்று மாற்றிக் கொண்டு ஆடிப் பாடினாள்.

இதைப் பார்த்து ராமு தம்பதிகளும் ஆடத் தொடங்கினார்கள். இணைகளாக வந்திருந்த யாரும் மிச்சமில்லை! அவர்கள், தாங்கள் ஆடியதோடு நிற்காமல் இன்பசாகரன் தம்பதியையும் வற்புறுத்தினார்கள். அவனும் எழுந்து, செம்மாந்து நடந்து வந்து, கண்ணம்மாவின் கரம்பிடித்து பாடி ஆடத் தொடங்கினான்.

பத்து மணி வரையில் இந்தப் பரவசப் பாராட்டு நிகழ்ச்சி! அரியநாயகம், காமாட்சி, நீலாம்பிகை அம்மை ஆகியோருடைய வைதிகம், ஐதீகம் எல்லாம் பஞ்சு பஞ்சாகப் பறந்தோடிவிட்டது. பிறகு ஒவ்வொருவரும் இன்பசாகரனுக்கு வாழ்த்துரைத்துவிட்டு விடைபெற்றுக் கொண்டார்கள்!

விவேக், இறுதியாக விடைபெற்றுக் கொள்ளும் போது மட்டும் ''என்ன இன்பா! நான் கொடுத்த வான் கோழி, மயிலுக்குப் பக்கத்தில் இருக்கிறதா?'' என்று குத்தலாகக் கேட்டான்.

''ஓ! நீங்க சொன்னபடியே சின்னய்யா அறை யிலே மயிலையும் வான்கோழியையும் பக்கத்திலே பக்கத்திலே வச்சிருக்கேன்'' என்ருன் முந்திக் கொண்டு கறுப்பன்!

''என்ன கறுப்பா! உன் மேல இவ்வளவு ஜவ்வாது வாசிக்கிறது?'' என்ருன் விவேக்!

''நான் தானே எல்லோருக்கும் ஜவ்வாது பொட்டு வச்சேன். தொட்ட கை மணக்காதுங்களா?'' என்று பதில் சொல்லிவிட்டு, தன் வேலையைப் பார்க்க ஓடினுன் கறுப்பன்.

சாந்தி முகூர்த்தத்திற்காக, பெண் வீட்டார் வாங்கித் தந்திருந்த சந்தன மரக்கட்டில் இரண்டும்—பட்டு மெத்தைகளும் — பன்னீர்ச்செம்பு, வெள்ளிக்கூஜா, தங்கக் குங்குமச் சிமிழ் அனைத்தும் படுக்கை அறையை அழகு படுத்திக் கொண்டிருந்தன.

இன்பசாகரன் முன்னரே வந்து படுக்கையறையில் வெல்வெட்டுச் சோபாவில் அமர்ந்திருந்தான். தோழிகளின் பெரும் சிரிப்பொலிக்கிடையே அறைக்கதவு திறக்கப்பட்டு; பழத்தட்டுடன் கண்ணம்மா, உள்ளே தள்ளப்பட்டாள்;

சாத்தப்பட்ட கதவின் ஓரத்திலேயே கண்ணம்மா தலைகவிழ்ந்தவாறு நின்று கொண்டிருந்தாள்.

இன்பசாகரன் சிறிது நேரம் அவளையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு பிறகு எழுந்து சென்று கதவைத் தாளிட்டான். படுக்கையறையின் இன்னெரு பக்கத்துக் கதவு, திறந்திருப்பதைக் கண்ணம்மா விழிகளால் உணர்த்தினுள்.

''அது பால்கனிப் பக்கத்துக் கதவு. திறந் திருந்தால் காற்று வரும். நிலவு, நட்சத்திரம், மேகம், இவைகளைத் தவிர அந்தக் கதவு வழியாக நம்மை யாரும் பார்க்க முடியாது'' என்று அவன் பேசிய கேலியை அவளது உள்ளம் வெகுவாக ரசித்து மகிழ்ந்தது.

அவள், அவன் பாதங்களில் விழுந்து வணங்கி எழுந்தாள். எழுந்தவளுக்கு எதிர்பார்த்தது கிடைக்க

வில்லை. பிறகு அவளே தன் கன்னத்தை அவன் பக்கம் திருப்பினாள். அவன் முத்தமிட்டான்.

பிறகு அவளைப் பார்த்து, ''கண்ணம்மா! முதலில் — இந்த இரண்டு கட்டில்களையும் தனித்தனியாகப் போடவேண்டும். உடனே ஏன் என்று கேட்காதே! கொஞ்சம் உதவி செய்! ஒரு கை நீயும் பிடி!'' என்று சொல்லிக்கொண்டே ஒரு கட்டிலின் ஒரு பகுதியைத் தூக்கினான். வியப்பும் திகைப்பும் விழிகளில் கூத்தாட, கண்ணம்மாவும் அந்தக் கட்டிலின் மற்றொரு பகுதியைப் பிடித்துத் தூக்கினாள். மூன்று அல்லது நான்கு அடி இடை வெளியில் இரண்டு கட்டில்களும் போடப்பட்டன.

''கண்ணம்மா இப்படி உட்கார்!''

அவள் பேசாமடந்தையாக அவன் சொன்னபடி, ஒரு கட்டிலில் உட்கார்ந்தாள்!

''கண்ணம்மா! நாம் ஒருவரையொருவர் விரும்பியது உடலுறவுக்காக மட்டுமல்ல! இல்லையா?''

''அப்படி நான் சொல்லவில்லையே! முதலில் இதயங்களின் சங்கமம். அதையொட்டித்தான் ஈருடல் ஓருடலாகிற உறவு!''

''சபாஷ்! கண்ணம்மா—நான் சொல்லவந்ததை நீயே சொல்லிவிட்டாய்! உடல் உறவு இல்வாழ்க்கையில் தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சி! உடல் உறவு கொள்ளாமலே கணவனும் மனைவியுமாக வாழ்ந்தவர்களும் உண்டு''

''ஆமாம் — அதற்கென்ன இப்போது?''

''நான் சொல்ல விரும்புகிற என் கொள்கையை நீ ஏற்றுக்கொள்வாய் என்றே நம்புகிறேன். உடலுறவு இல்வாழ்வில் தவிர்க்க முடியாதது என்றாலும்; அந்த உறவே இல்வாழ்க்கை ஆகிவிட முடியாது! உடலுறவு இன்றி இல்வாழ்வு நடத்துகிற தம்பதிகளுக்கும்—உடல் உறவையே பிரதானமாகக் கருதி வாழ்கிற தம்பதிகளுக்கும் இடையே நாம் ஒரு தனித்தன்மையை உருவாக்க வேண்டும். அதாவது உடலுறவும் வேண்டும்! ஆனால் அதுவே நமது இல்வாழ்வின் இலட்சியம் என்று ஆகிவிட்டால், விரைவில் அந்த வாழ்வே கசந்துவிடும்''

என்ன சொல்ல முயலுகிறான் தன் கணவன் என்று தெரிந்து கொள்ள முடியாமல் கண்ணம்மா திண்டாடினாள்.

"புரியும்படி வெளிப்படையாகச் சொல்லி விடுகிறேனே! தாம்பத்திய வாழ்வில் உடலுறவு, அளவுக்கு மிஞ்சினால் — இருவர் உடல் நலமும் கெடும்! அதனால் தான் அந்த உறவு எப்படி அமைய வேண்டுமென்று நமது முன்னோர்கள் முறை வகுத்திருக்கிறார்கள். பதினைந்து நாளைக்கு ஒருமுறை என்பார்கள்! அது ஆரம்பத்தில் என்னாலும் முடியாது! உன்னாலும் முடியாது! நாம் வாரம் ஒரு முறை என்று நிர்ணயித்துக் கொள்வோம்! என்ன சரிதானா?''

இன்பசாகரன், கண்ணம்மாவைத் தன்னுடைய உபதேசத்தால் நிலை தடுமாற வைத்துவிட்டான். 'வாரம் ஒரு முறை' என்று அவன் வாக்கியத்தை முடித்த பிறகு தான் அவளுக்குப் போன உயிர் மீண்டும் வந்தது. இல்லையேல்; இவன் ஏதோ பட்டினத்தாரைப் போல மனைவிக்கு உபதேசம் செய்துவிட்டு படுக்கை அறையை விட்டு வெளியேறி விடுவானோ என்ற பயமும் அவளைத் தொத்திக்கொண்டுவிட்டது. நல்லவேளையாக அறிவுரை அந்த எல்லைக்குப் போகாமல், கண்ணம்மாவுக்கு ஆறுதல் தரும் அளவுக்கு அமைந்ததே! அதுவே போதுமென அவள் மகிழ்ந்தாள்.

''அடிக்கடி உணர்ச்சி வசப்பட்டு, உடலுறவு கொண்டு—புனிதமான இல்வாழ்வின் நோக்கத்திற்கு மாசு ஏற்படுத்தி விடக்கூடாது என்றுதான்— முன் எச்சரிக்கை யாக, கட்டில்களைத் தனித்தனியாகப் போடச் சொன்னேன்'' என்றும் அவன் காரணம் சொன்னான்.

''வெளிநாடுகளில் பெரும்பாலான வீடுகளில் கட்டில்கள் இப்படித்தான் தனித்தனியாக இருக்கும்; கணவனும் மனைவியும் நாற்காலிகளில் அமர்ந்து பேசி மகிழ் வார்கள். உண்டு மகிழ்வார்கள். பின்னர் தனித்தனியாகப் படுத்து விடுவார்கள். என்றோ ஒருநாள்தான்; உடலுறவை விரும்புவார்கள். அதனால்தான் அவர்கள் திடகாத்திர முள்ளவர்களாகவும் இருக்கிறார்கள். ஒன்றிரண்டு பெற்றா லும் திடகாத்திரமுள்ள அழகான குழந்தைகளைப் பெறு கிறார்கள்''

இன்பசாகரனின் அறிவுரை நீண்டு கொண்டே போனது! தன் கணவன், ஒரு காமாந்தகாரனல்ல — அதே நேரத்தில் பெண்வாடையே கூடாது' என்ற உண்மையான துறவியுமல்ல—இல்வாழ்வை ஒரு புனிதமான தொண்டாகச்

கருதுகிற இலட்சிய மனிதன் என்ற அழிக்க முடியாத சித்திரம், கண்ணம்மாவின் நெஞ்சில் எழுதப்பட்டுவிட்டது.

தான் கையில் கொடுத்த குறுந்தொகைப் பாட்டும், கடிதத்தில் எழுதிய கலிங்கத்துப்பரணி விளக்கமும்— அவருக்குப் பிடிக்கவில்லை. அதை வெளிப்படையாகச் சொல்லாமல்தான் இப்படி சுற்றி வளைத்துத் தனக்குப் புத்தி கூறுகிறார் என்ற முடிவுக்கு அவள் வந்தாள்.

''நான் ஏதாவது தவறாக நடந்திருந்தாலோ— எழுதியிருந்தாலோ— அதை மனதில் வைத்துக்கொள்ளாதீர்கள். உங்கள் நோக்கத்திற்கு நான் நடக்கச் சித்தமாயிருக்கிறேன்'' என்று அவனது கைகளை எடுத்துக் கன்னங்களில் ஒத்திக் கொண்...

'...மா! என் இன்பமே! உனக்கு இன்னொன்றும் சொல்ல வேண்டும். சற்று முன்பு கூட நாம் நண்பர்களுடன் சேர்ந்து ஆடினோம், பாடினோம்! அதற்கெல்லாம் இணங்காவிட்டால் நம்முடைய ஆண்மை, பெண்மை எல்லாவற்றையுமே கேலி பேசுகிற ஒரு கூட்டம் இருக்கிறது! அதற்குப் பயந்து உலகத்திற்காகப் போடுகிற வெளி வேஷம் அது! ஆனால் நமது இல்வாழ்வைப் பொறுத்தவரையில் அதன் தூய்மை ஒரு சிறிதும் கெடக்கூடாது. இதோ, இந்த விளக்கின் ஒளியில் நாம் பேசிக்கொண்டிருக்கிறோம். அருகருகே அமர்ந்திருக்கிறோம்! நீ தருகிற திராட்சையை நான் சாப்பிடுகிறேன். நான் தருகிற திராட்சையை நீ சாப்பிடுகிறாய்! ஆனால் இதற்கு அடுத்த கட்டமான உடலுறவு என்பது தெய்வீகத் தன்மை வாய்ந்தது. நாம் உடலால் உறவு கொண்டிருப்பதை, இந்த அறையில் பறந்து கொண்டிருக்கிற ஒரு ஈ ஒரு கொசுகூடப் பார்க்கக் கூடாது!

''அதில் நீயும், நானும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அதாவது, நம் உடலுறவின்போது சிறு வெளிச்சமும் இந்த அறையில் இருத்தலாகாது. இருந்தால் தேக உறவு என்னும் தெய்வீகத் தன்மை பாழாகிவிடும். மறந்தும் மின் விளக்கை, நம்மை அறியாமல் போட்டுவிடக் கூடாதென்றுதான்; மின் விளக்குப் பொத்தானைக் கூட படுக்கை அருகே வைக்காமல் அதோ, 'பாத்ரும்' அருகே வைத்திருக்கிறேன்''

—என்று பேசிக் கொண்டே, கண்ணம்மாவின் தலையை அழுத்தி மார்பில் பதித்துக் கொண்டு அவள்

உச்சந்தலையில் ஒரு முத்தமீந்தான். அவளும், அவனைத் தழுவிக் கொண்டு, அவன் கன்னத்தில் முத்தமாரி பொழிந்தாள். தன் கண்களுக்கு முத்தம் வேண்டுமென்று கண்களை விட்டே கேட்கச் சொன்னாள். அவ்வாறே அவன் இதழ் குவித்து இமை மலர்களில் முத்தமளித்தான். பின்னர் ஆடைகள் நழுவத் தொடங்கின.

''கண்ணம்மா! சொன்னதை மறந்து விடக் கூடாது — இரு வருகிறேன்! உடலுறவு, தெய்வீகமானது! விளக்கை அணைத்துவிட்டு வருகிறேன்'' என்று 'பாத்ரூம்' பக்கம் சென்று அங்குள்ள பொத்தானை இழுத்து விளக்கை அணைத்தான்.

படுக்கையறை இருண்டு போனது.

தெய்வீகத் தன்மை கொடி கட்டிப் பறந்தது! நீண்ட நேர மௌனம். இன்பமான முனகல் ஒலிகள்! பிறகு அந்த ஒலிகளும் அடங்கின.

''போய் விளக்கைப் போடுங்கள்'' என்று வெட்கம் கலந்த குரலில் கண்ணம்மா கொஞ்சினாள்.

சில விநாடிகளுக்கெல்லாம் விளக்கு எரிந்தது.

இன்பசாகரன் 'பாத்ரூம்' சென்று கதவை மூடிக் கொண்டான். அவன் வரும்வரையில் கதவருகில் காத்திருந்த கண்ணம்மா, அவன் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்ததும் முகத்தைக் கையால் மூடிக் கொண்டே உள்ளே சென்று, ஆடைகளைத் திருத்தி உடுத்திக் கொண்டு வெளியே வந்தாள். பிறகு இருவரும் பழங்களைச் சுவைத்தனர். பால் அருந்தினர். ஒருவரைப் பார்த்து ஒருவர் மகிழ்ந்தனர். பின்னர் தனித்தனிக் கட்டிலில் படுத்துக் கொண்டனர்.

காலை மலர்ந்ததும் கண் மலர்ந்த கண்ணம்மா, தலைமுழுகி மஞ்சள் குளித்து நெற்றியில் குங்குமப் பொட்டிட்டு — தன் மனங்கவர்ந்த மணவாளனுக்குச் சிற்றுண்டி பரிமாறி, மாமனார், மாமியார்க்குத் தேவையானதையும் கவனித்து, கணவனின் கால் செருப்பு வரையில் கவனித்து எடுத்து அவன் காலில் மாட்டிவிட்டு, அலுவலகத்தில் பகல் உணவுக்கான டிபன் காரியரையும் வேலைக்காரக் கறுப்பன் கையில் கொடுத்து கார் புறப்படும் வரையில் வாசலில் நின்று வழியனுப்பி வைத்தாள்.

இந்நாள் போலவே எந்நாளும் அவள் வாழ்வில் இன்பகரமான நாள்களாக அமைந்திருந்தன.

இன்பசாகரன் — கண்ணம்மாவின் இல்லற வாழ்க்கை எவ்வளவு பவ்யமாக நடைபெறுகிறது தெரியுமா? அடடா! புதுமணத் தம்பதிகளுக்கெல்லாம் வழிகாட்டத் தக்க வாழ்வு! வைகறைப் பொழுதில் கடற்கரைக்கு வந்து குளிர்ந்த காற்றில் உலவுகிறார்கள். மாலை நேரத்தில் ஏதாவது ஒரு திரையரங்கில், அல்லது கண்காட்சி, அல்லது கலைநிகழ்ச்சியில் அவர்களைத் தவறாமல் பார்த்து-விடலாம்.

அரியநாயகத்திற்கும் காமாட்சிக்கும் போன ஜென்மத்தில் செய்த புண்ணியம் இந்த ஜென்மத்தில் மருமகளாக வந்து வாய்த்திருக்கிறது. நீலாம்பிகை அம்மாளும் ரொம்பக் கொடுத்து வைத்தவள்! பாக்கியசாலி! இவ்வளவு அழகான ஒரு மருமகன், அறிவாளியான மருமகன், கிடைப்பதென்றால் சாமான்யமா?

இதுபோன்ற புகழாரங்கள் குவிந்தன அந்தக் குடும்பத்தைப் பற்றி! மூன்று நான்கு மாதத்திற்குள்ளாகவே இன்பசாகரன், கண்ணம்மா இருவரையும் பற்றி அவர்களை ஏற்கனவே பிடிக்காதவர்கள்கூடப் பாராட்டத் தலைப்பட்டு விட்டார்கள்.

பாராட்டியோர், போற்றியோர், புகழ்ந்தோர், வாழ்த்தியோர், வர்ணித்தோர்—அனைவரும் திடுக்கிடும் வண்ணம் இடிபோன்ற செய்தி யொன்று ஒருநாள் தினசரி இதழ்களில் வெளிவந்தது. 'அடேடே! யார் கண்ணு பட்டதோ தெரியலியே அந்தக் குடும்பத்துக்கு' என்று "த்சு" கொட்டாத பெரியவர்களும் உறவினர்களுமே இல்லை! அத்தகைய பயங்கரமும் வேதனையுமான செய்தி தான் என்ன?

வீட்டு வேலைக்காரனைக்
கொலை செய்ததாக
கண்ணம்மா என்னும்
இளம் பெண் கைது!

இப்படிப்பட்ட தலைப்புடன் செய்தி வெளியிட்ட எல்லா ஏடுகளிலும், கொலை பற்றிய விவரங்களும் வெளியிடப்பட்டிருந்தன.

''பிரபல கவிஞரும்; கவிதைப் போட்டியில் பரிசு பெற்றவருமான இன்பசாகரனின் இளம் மனைவி கண்ணம்மா. திருமணமாகி நான்கு மாதங்கள்கூட சரியாக முடியவில்லை.

நேற்றிரவு கண்ணம்மா படுக்கையறையில் தூங்கிக்கொண்டிருந்தபொழுது, இன்பசாகரன் வீட்டு வேலைக்காரன் கறுப்பன் என்பவன் கண்ணம்மாவைக் கற்பழிக்க முயற்சித்திருக்கிறான். அவனிடமிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள ஒரு பெரிய கட்டையால் அவன் தலையில் கண்ணம்மா அடித்ததாகவும், அதனால் படுகாயமுற்ற கறுப்பன் மருத்துவமனையில் இறந்து விட்டதாகவும் கூறப்படுகிறது.

அவனிடம் மரண வாக்குமூலம் பெறப்பட்ட தாகவும் தெரிகிறது. கொலைக்குற்றம் சுமத்தப்பட்ட கண்ணம்மா, கைது செய்யப்பட்டு விசாரிக்கப்படுவ தாகவும் தகவல்கள் கிடைத்துள்ளன. கைது செய்யப் பட்ட கண்ணம்மா, மூன்று மாதம் கர்ப்பமாக இருக் கிறாள் என்றும் அவளது தாயார், நீலாம்பிகை அம்மாள் அழுது கொண்டே சொன்னார்''

*அரியநாயகம், காமாட்சியைப் பார்த்து 'இந்த மாதிரி ஒரு கெடுதி நம்ப வீட்டுக்கு வந்துட்டுதே' என்று தேம்பித் தேம்பி அழுதார். ''இந்த வீட்டு உப்பைத் திண்ணு வளர்ந்த கழுதை, இப்படி ஒரு அக்கிரமத்தைப் பண்ண எப்படித்தான் துணிஞ்சான்?'' என்று காமாட்சி கதறினாள்.*

*புலன் விசாரணைகள் முடிவுற்று, வழக்கு நீதிமன்றத்திற்கு வந்தது. கண்ணம்மா, குற்றவாளிக் கூண்டில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டாள். கண்ணம்மாவின் வாக்குமூலம், நீதிமன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டது.*

*''நான் இன்பசாகரனைக் காதலித்தேன். என் விருப்பத்தை அவரிடம் வெளியிட்டேன். அறிவும் ஆற்றலும் படைத்த அவர், கண்ணியமான மனிதராகவும் இருந்ததால் அவரையே மணக்க வேண்டுமென்று என் தாயிடம் முறையிட்டேன். என் இஷ்டப்படி திருமணம் முடிவுற்றது.*

*யாரையுமே திருமணம் செய்து கொள்ள முடியாது என்று புறக்கணித்து வந்தவர், என்னை மணந்து*

கொள்ள ஏற்றுக் கொண்டது பலரை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது

தங்களை மணக்க விரும்பாததால் தனது ஆண்மையைக் கூடக் கேலி செய்த பெண்களைப் பற்றி அவர் என்னிடம் அடிக்கடி சொல்லியிருக்கிறார். எங்களின் இல்வாழ்வு நான் எதிர்பார்த்தபடி இனிமையாக அமைந்தது. எங்களுக்குள் இந்த மூன்று நான்கு மாதங்களில் கடுகளவு கருத்து வேற்றுமை கூட ஏற்பட்டது கிடையாது.

எங்கள் வீட்டில் வேலை செய்த கறுப்பன் மிகவும் விசுவாசமுள்ளவன் என்று என் மாமனாரும் மாமியாரும் கணவரும் சொல்லிக் கொண்டிருப்பார்கள். நானும் அவனிடம், அன்பு காட்டிப் பராமரித்து வந்தேன். என்னை அவன் எப்படித் தவறாகப் புரிந்து கொண்டான் என்றே தெரியவில்லை.

அன்றிரவு 11 மணி அளவில் நான் என் படுக்கையறையில் தூங்கிக் கொண்டிருந்தேன். என் கணவர், கீழே அவரது அறையில் அலுவலகக் கோப்புக்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அதனால் அவர் சீக்கிரம் வந்து படுக்கவில்லை.

மாடியில் படுக்கையறைக்குக் கறுப்பன் வந்திருக்கிறான். எனக்குத் தெரியாது. திடீரென என் உடம்பை அமுத்தியது போன்ற உணர்ச்சி. திடுக்கிட்டு ''டார்ச் விளக்கை'' அடித்தேன்.

கறுப்பன் என்னைக் கற்பழிக்க முழு முயற்சியில் ஈடுபட்டான். அவனுக்கும் எனக்கும் நடந்த போராட்டத்தில் அவன் தலையில் டார்ச் லைட்டால் அடித்தேன்!

அவன், மேலும் என்மீது பாயவே அறையில் கிடந்த ஒரு கட்டையை எடுத்து அவன் தலையில் வேகமாக அடித்தேன். அப்படி நான் செய்திருக்காவிட்டால் என் கற்பு பறி போயிருக்கும். என்னைக் காப்பாற்றிக் கொள்ள நான் செய்த முயற்சி, இப்படிக் கொலையில் முடிந்தது''.

இந்த வாக்குமூலத்தைச் சொல்லி முடிப்பதற்குள் கண்ணம்மாவின் கண்களிலிருந்து நீர்த்துளிகள் கொட்டிக் கொண்டேயிருந்தன.

நீதி மன்றத்தில் ஒரே அமைதி! இன்பசாகரன், அவனது நண்பர்கள் எல்லாம் நீதிமன்றத்தில் அமர்ந்திருந் தனர். இன்பசாகரனின் கண்கள் கலங்கி, ரத்த சிகப் பாக இருந்தது.

கறுப்பனின் மரண வாக்குமூலம் விரிவாகப் பெறப்பட்டிருந்தது. அந்த வாக்குமூலம், பலருக்கும் பேரதிர்ச்சியைத் தரக்கூடிய — நினைத்துக் கூடப் பார்க்க முடியாத —நெஞ்சைக் குலுங்க வைக்கத் தக்கதாக அமைந் திருந்தது.

''என் பெயர் கறுப்பன். அரியநாயகத்தின் வீட்டில் எங்க பாட்டன் பூட்டன் காலத்திலேருந்து வேலே பார்க்கிறாங்க! அதைத் தொடர்ந்து நானும் வேலே பார்க்கிறேன்.

எங்க சின்னய்யா இன்பசாகரன் ஒருமாதிரி! உண்மையைச் சொல்லணும்னு, ஆள் அழகா இருப்பாரே தவிர அறிவுப்பஞ்சம் அதிகம், ஆனு, ஊர்ல யார் எதைச் செஞ்சாலும் அதையே தானும் செஞ்சி, பேரும் புகழும் வாங்கணும்னு ஆசைப்படுவாரு!

நம்ப ஊர்க்கவிஞர் கம்பனடியான் கவிதைப் போட்டியிலே பரிசு வாங்கிட்டார்னு இவரும் அதுக்குப் பதிலா தானும் பரிசு வாங்கணும்னு ஆசைப்பட்டாரு! வான் கோழியால மயில் மாதிரி ஆட முடியுமா?

ஆனாலும் அவருக்கு ஆசைவிடவில்லே! இறந்து போனரே, நம்ப ஊருப் பெரிய கவிஞரய்யா! அவருகிட்ட என்னேயும் அழைச்சிட்டுப் போயி, ஒரு ஆயிர ரூபாய் பணத்தை கவிஞரய்யா கிட்ட கொடுத்து, ஒரு கவிதையை எழுதி வாங்கி, அதைத் தன் பெயரைப் போட்டுப் போட்டியிலே பரிசு பெற்றாரு!

அவருடைய அழகைப் பார்த்து, சில பொம்பளேப் பிள்ளேகள் எல்லாம் அவரைச் சுத்தும். ஆனு, அவரு, கல்யாணமே செய்துக்க போறதில்லேன்னு பிடிவாதமா சொல்லிவிட்டாரு! உண்மையான காரணம் என்னன்னு! அவருக்கு ஆண்மையே இல்லே! என்னென்னமோ மருந்து, ஊசி, டாக்டர்— எதுவும் பலிக்கலே!

இந்த விஷயம் எனக்கு மாத்திரம் தெரியும்; நான் அதைப் பரம ரகசியமா வச்சிருந்தேன்.

ஆமா; ஊர்லே அவரோட சிநேகிதர்களும் — ஆபீசிலே இருக்கிற பொம்பளேகளும், அவருக்கு ஆண்மை யில்லேங்கிறதைப் பரவலாப் பேச ஆரம்பிச்சிட்டாங்க! அது இவர் காதுக்கும் வந்துட்டுது. தனக்கு ஆண்மையிருக்குன்னு காட்டிக்க கண்ணம்மாவை அவசர அவசரமாக் கல்யாணம் பண்ணிருரு!

சாந்தி முகூர்த்தத்திற்கு நாள் வச்சாச்சு! என்னே அழைச்சிகிட்டு பம்பாய், டெல்லி யெல்லாம் போனுரு! அங்க உள்ள டாக்டர்களும் என்னென்னமோ மருந்தெல்லாம் கொடுத்தாங்க! முடிவா எல்லா டாக்டருமே கையை விரிச்சுட்டாங்க!

பம்பாயிலே ஒருநாளு என்னேச் சௌபாத்திக் கடற்கரையிலே உக்காரவச்சிகிட்டு, பயங்கரமான ஒரு செய்தியைச் சொன்னுரு! கண்ணம்மாவை நான் கல்யாணம் பண்ணியிருந்தாலும் அந்த அம்மாவோட உடலுறவு நீ தாண்டா வச்சுக்கணும்னு சொன்னுரு! அப்பத்தான் அவர் ஆண்மையிலே யாரும் சந்தேகப்பட மாட்டாங்களாம் — அதுக்காக இந்த யோசனேயை சொன்னுரு!

நான் அவர் காலேப் பிடிச்சுக் கெஞ்சிக் கூத்தாடி, மறுத்துட்டேன். நான் அதுவரையிலே பொம்பளேகளோட பழகினதே இல்லே.

அப்புறம் அவரு என்னேத் தந்திரமா அழைச்சி கிட்டுப் போயி, பம்பாயிலே விபசாரம் பண்ற ஒரு வீதி தனியா இருக்குல்லே; அங்க கொண்டுபோயி விட்டாரு! ஒருத்தி என்னே இழுத்துக் கிட்டுப் போளு! அன்னேக்கு அதுலே எனக்கு ருசி ஏற்பட்டுப் போச்சு!

இன்பசாகரனும், தன்னேட ஆண்மையை சோதிச்சுப்பாக்க ஒரு வீட்டுக்குப் போயிருக்காரு! டாக்டர் கொடுத்த மாத்திரையை முழுங்கிட்டு முயற்சி பண்ணி யிருக்கிருரு ! எதுவும் நடக்கலே—

அங்கேயிருந்த பொம்பளே, ரூபாயைப் புடுங்கிக் கிட்டு ஆளேக் கேலி பண்ணி துரத்திவிட்டிருக்கு—

"ஏய்! கறுப்பா! உன்னே நான்தாண்டா வேணும்னு அனுப்பினேன். அதே மாதிரி நானும் போனேன்டா! தோல்வி தாண்டா!" அப்படின்னு ரொம்ப வருத்தப்பட்டாரு — அப்பறம் டெல்லியிலே போயி, எனக் கிட்ட அழுது புலம்பி என்னே அவர் திட்டத்துக்கு சம்மதிக்க வச்சிட்டாரு!



எனக்கும் பம்பாய் அனுபவத்துக்குப் பிறகு ஆசை ஏற்பட்டு விட்டதனாலே சரின்னு சொல்லிட்டேன். கண்ணம்மாகிட்ட என்னா சொன்னாரோ என்னமோ — வாரத்துக்கு ஒரு தடவை நான் போயி, பால்கனிப் பக்கத்து கதவு கிட்ட ஒளிஞ்சிருப்பேன். உடம்புலே எனக்கு ஒரு துணி இருக்காது. சுமார் பத்திலேயிருந்து பதினோரு மணிக் குள்ளே, லைட்டை அணைப்பாரு! நான் அந்த அம்மா

படுக்கை கிட்டப் போய்டுவேன். பாவம் அந்த அம்மா, அது இருக்கிற மயக்கத்திலே, என்னை அவர் கணவன்தான்னு நினைச்சுகிட்டு எனக்கிட்டே ரொம்ப சந்தோஷமா இருக்கும்.

இப்படி, அவர் போட்ட திட்டப்படி நடந்து கிட்டு இருந்துது.

ஒருநாள், அந்தம்மா கையால என் நெற்றியில இருக்கிற கட்டியைத் தடவிப் பாத்துட்டுது. அதுக்கு எப்படியோ சந்தேகம் இருந்திருக்கு போல இருக்கு. உடனே ஒரு டார்ச் வெளிச்சம் என் மூஞ்சியில பட்டது!

''அடப்பாவி''ன்னு சொல்லிகிட்டு டார்ச்லைட்டாலும் கட்டையாலும் என் மண்டையில அடிக்க ஆரம்பிச்சிட்டுது! பாத்ரூம்ல வழக்கப்படி ஒளிஞ்சிருந்த இன்பசாகரன் ''அடிக்காதே! அடிக்காதே!''ன்னு ஓடியாந்தாரு! அப்புறம் எனக்கு ஒண்ணும் தெரியாதுங்க.

அந்த வான்கோழி மனுஷன் தன்னை மயிலுன்னு காட்டிக்க அந்த அம்மா மானத்தையும் வாங்கி, என் உயிரையும் வாங்கிட்டாரு!''

கறுப்பனின் வாக்குமூலம் வடிகட்டிய பொய் என்று கண்ணம்மா நீதிமன்றத்தில் அழுத்தம் திருத்தமாகச் சொன்னாள்.

''என் கணவர் கண்ணியமான மனிதர். அறிவாற்றல் நிரம்பியவர். அவருக்கு ஆண்மையில்லை என்று அவதூறு கூறப்படுவதை நம்பாதீர்கள்! அவரது அன்பின் சின்னம்தான் இதோ என் வயிற்றில் வளருகிறது'' என்று அலறியவாறு அவள் நீதிமன்றத்தில் மயங்கி விழுந்தாள்.

நிமாண்டில் இருந்த கண்ணம்மாவைக் காண்பதற்கு இன்பசாகரன் சென்றான்.

''அந்தப் படுபாவி கறுப்பன், இப்படி ஒரு கற்பனைப் புராணத்தை வாக்குமூலமாகக் கொடுத்துவிட்டுச் செத்துத் தொலைந்திருக்கிறானே; அவன் ஆத்மா சாந்தி அடையாது! பிசாசாகத்தான் அலையும்!'' என்று இன்பசாகரன் கண்ணம்மாவிடம் சொன்னான்.

''மிஸ்டர் இன்பசாகரன்!'' என்றாள் கண்ணம்மா! அவன் திடுக்கிட்டான்.

"மிரளாதீர்கள்! இனி எனக்கு நீங்கள் மிஸ்டர் இன்பசாகரன்தான்! ஆனால் வெளி உலகிற்கு என் கணவர்! ஆண்மையற்ற நீங்கள் ஆடிய கேவலமான நாடகத்தை நான் என் உயிர் போனாலும் சொல்லமாட்டேன். உங்களுக்கு மனைவி நான்! நீங்கள் தாலி கட்டிய மனைவி தான்! உங்கள் தந்திரத்தால் நான் ஏமாந்தேன். ஆனால் படுக்கையறையில் இந்த நிபந்தனைகள் எல்லாம் ஏன்? என்ற கேள்விக்கு எனக்கு விடை கிடைக்காமல் கிடந்தேன்.

தெய்வீகத் திரை போட்டீர்களே! அதை ஒரு நாளைக்குத் தைரியமாகக் கிழிப்பது என்ற முடிவோடுதான், தலையணைக்கு அடியில் டார்ச்லைட்டை ஒளித்து வைத்தேன்.

சே! எவ்வளவு இழிவான போக்கு! தூ! எவ்வளவு மோசமான பண்பு! இப்படி வசைபாடுகிறேனே யென்று பயப்படாதீர்கள்! என் உண்மையான கணவன், கறுப்பன் தான். அதனால் நான் இப்போது விதவை! ஆனால், நான் விதவைக் கோலம் பூண மாட்டேன். உங்களை ஊரார் கேவலமாகப் பேச இடம் தரமாட்டேன். கறுப்பனுக்குப் பிறக்கப் போகிற குழந்தையைக்கூட உங்கள் குழந்தைதான் என்று சொல்லி, உங்கள் ஆண்மையை ஊர் முழுதும் பறை சாற்றுவேன்! போய் வாருங்கள்!''

இன்பசாகரன், எதுவும் பேசாமல் அவளுக்கு முன்னால் தலைதாழ்த்தி நின்றுவிட்டு அங்கிருந்து புறப்பட்டான்!

நீதிமன்றத்தின் தீர்ப்பு வெளியாயிற்று. கறுப்பனின் வாக்குமூலத்தை நீதிமன்றம் ஒரு கற்பனைக் கதையாகவே கருதிற்று! எவ்வளவு பெரிய குடும்பத்துப் பிள்ளை — இன்பசாகரன், அவன் இவ்வளவு கேவலமாக நடந்து கொள்வான் என்பதை நீதிமன்றம் நம்பத் தயாராக இல்லை. தன்னையும் தன் கற்பையும் காப்பாற்றிக் கொள்ள கண்ணம்மா, தன்னையுமறியாமல் கொலை செய்தாள் என்ற நிலையை ஏற்றுக்கொண்டு அவளை நீதிமன்றம் விடுதலை செய்தது!

அடுத்த சில மாதங்களுக்கெல்லாம் கண்ணம்மாவின் பிரசவ காலம் நெருங்கியது. ஏற்காட்டில் உள்ள நீலாம்பிகை அம்மாளின் தனி பங்களாவுக்குச்

சென்று அங்கே 'பிள்ளைப்பேறு' வைத்துக் கொள்ளலாம் என்று முடிவாயிற்று.

அரியநாயகம், காமாட்சியம்மா, நீலாம்பிகை யம்மை, இன்பசாகரன், கண்ணம்மா — ஆகிய எல்லோரும் ஏற்காட்டுப் பங்களாவில் போய் தங்கினர்கள். இன்பசாகர னுக்குத் தெரிவிக்காமலே. அவனது நண்பர்கள் பாலு, ராமு, வேணு, விவேக், ஆகியோரும் முன்பே ஏற்காட்டில் இருந்தனர்.

கண்ணம்மா, பிரசவ வேதனைப்படுகிருள் எனக் கேள்வியுற்று, தனித்தனி ஓட்டல்களில் இருந்த அவர்கள் நீலாம்பிகை பங்களாவுக்கு வந்து குழுமினர்.

இன்பசாகரன், குழப்பத்தோடு அங்குமிங்கும் அலைந்துகொண்டிருந்தான். தான் செய்த கொடுமையான தவறுகளை எல்லாம் மன்னித்து, தன்னைக் காட்டிக் கொடுக்காத கண்ணம்மாவின் பெருந்தன்மையை நினைத்து நினைத்து அவளுக்கு மனதார நன்றி கூறிக்கொண்டிருந் தான்.

ஆண் குழந்தை!

ஆண் குழந்தை!!

—என்று உள்ளேயிருந்த பெண்கள் குரல் கேட்டது. கண் ணம்மா, மயக்கநிலையில் இருந்தாள். குழந்தையைக் குளிப் பாட்டி வெளியே தூக்கி வந்தாள் ஆயா!

இன்பசாகரன், ராமு, பாலு, வேணு, விவேக், ராமுவின் மனைவி, விவேக்கின் மனைவி, அரியநாயகம், காமாட்சி, நீலாம்பிகை அனைவரும் குழந்தையை ஆவலுடன் பார்த்தனர்.

கண்ணம்மா, மறைத்த உண்மைகளை அந்தக் குழந்தை அம்பலப்படுத்தி விட்டது.

அனைவரும் திகைத்து நின்றனர். பேச்சில்லை, ஒரே அமைதி!

குழந்தை ஒரே அட்டைக் கறுப்பு!
நெற்றியில் ஒரு சிறு உருண்டை!
கை யில் நான்கு நான்கு விரல்கள்!

கண்ணம்மாவைப் போய், டாக்டரம்மா எழுப்பிப் பார்த்தாள்!

அவள் மூச்சின்றிக் கிடந்தாள், நிரந்தர அமைதி!

— முற்றும் —

★வான்கோழியை ஆங்கிலத்தில் 'டர்க்கி' (TURKEY) என்று அழைக்கிறார்கள். ஆனால் துருக்கிக்கும் இதற்கும் துளிகூட சம்பந்தம் கிடையாது. 'டர்க்' 'டர்க்' என்று கத்துவதால் ஆங்கிலேயர்கள் இதற்கு 'டர்க்கி' என்று பெயர் வைத்தார்கள்.

★ மெக்சிகோ நாட்டில்தான் வான்கோழிகள் முதன் முதலில் தோன்றியதாகக் கருதப்படுகிறது. சுமார் 500 ஆண்டுகளுக்கு முன்பு வரை வான்கோழி என்றால் என்ன என்றே ஐரோப்பியர்களுக்குத் தெரியாது. மெக்சிகோவிலிருந்து ஸ்பெயின்காரர்கள் தங்கள் நாட்டுக்கு முதன் முதலாக இதைக் கொண்டுவந்தார்கள். அதன்பிறகே ஐரோப்பா முழுவதும் இது பரவத் தொடங்கியது.

★வான்கோழிகளில் 7 வகை உண்டு. வட அமெரிக்காவில்தான் வான்கோழிகள் அதிகம்.

★ஐரோப்பியர்களுக்கு வான்கோழிப் புலவு என்றால் வெகு



# டர்க், டர்க், டர்க்கி

—கவுதமன்—

பிரியம்: அதுவும் கிறிஸ்துமஸ் விருந்தில் வான்கோழிப் புலவு தான் முக்கிய அயிட்டம்.

★வான்கோழி மற்ற சமயங்களில் கத்துவதைவிட சேர்க்கையின் போது எழுப்பும் ஒலிதான் மிகவும் விசித்திரமாக இருக்கும். சேர்க்கைக்காகப் பெண் கோழிகளை ஆண் கோழி அழைக்கும் விதமே அலாதி. அப்போது, ஆண் கோழியின் தலையிலுள்ள கொண்டை போன்ற சிறு அமைப்பு, சற்றே விரிந்து பெரிதாகும். அதன் உடல் ஒரு முறை சிலிர்த்துக்கொள்ளும். தொண்டையிலுள்ள 'பை' போன்ற பகுதியில் சிவப்பு நிறம் ஏறும். அறுபட்டதுபோல் இருக்கும் தோகையை மெல்ல விரிக்க முயலும்.

★பொதுவாக, பெட்டைக் கோழிகளை ஆண் கோழி கவர முயற்சிப்பதைவிட, ஆண் கோழியைப் பெட்டைக் கோழிகள் கவர முயற்சிப்பதுதான் அதிகம். ஓர் ஆண் கோழியைப் பல பெட்டைக் கோழிகள் சுற்றி மொய்த்துக் கொள்ளும்.

ஆண் கோழியின் 'அந்தப்புரத்தில்' ஏராளமான பெட்டைகள் இருப்பது உண்டு. ஆனால் 'காரியம்' முடிந்த பிறகு, இவைகள் ஆணைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் ஓடி விடும்.

★இப்போதெல்லாம், இறைச்சிக்காக வான்கோழிகளைப் பெருமளவில் கொழுக்க வைத்துவிடுகிறார்கள். இதனால் அவற்றுக்கு உடலுறவில்ஈடுபடுவது சிரமமாகிவிடுகிறது. இத்தகைய சமயங்களில், பெண் கோழிகளுக்கு செயற்கைக்கருவைச் செலுத்தி இனவிருத்தி செய்கிறார்கள்.

★வான்கோழியின் கழுத்துப்பகுதியிலுள்ள பை போன்ற விநோத அமைப்பும், தலையின் மீதுள்ள சிறு சிறு முண்டுகளும் இக்கோழிகளின் மனநிலைக்கு ஏற்ப நிறம் மாறும். சிவப்பு, வெள்ளை, கருநீலம் என்று இதன் வர்ணங்கள் மாறுகின்றன. குறிப்பாக வசந்த காலத்திலும் கோடை காலத்திலும இவற்றின் நிறம் சிவப்பாகி விடும்.

★வான்கோழி ஒரு நாளைக்கு இரண்டு தடவை தண்ணீர் குடிக்கும். தண்ணீரைக் குடிப்பதற்காக குளத்தில் இறங்கி மிதக்கும். ஆனால் தலையை முங்கி குளிக்கவே குளிக்காது.

★குளிர்காலம், அதுவும் 'சொத சொத'ப்பான மழைக்காலம் என்றால் வான்கோழிகளுக்கு ஒத்துக் கொள்ளாது. இந்த ஈரமான வானிலையில், பல இளம் கோழிகள் கூட்டம் கூட்டமாகச் செத்துப் போவதும் உண்டு!

★ மழைக்காலம் என்றால் இரை தேடக்கூட வெளியே போகாமல், இருக்கும் இடத்திலேயே அதிகபட்சம் 10 நாட்கள் வரைகூட உணவு இல்லாமல் முடங்கிக் கிடக்க வான்கோழியால் முடியும்.

★ வான்கோழிக்குப் பறக்கத் தெரியுமா? தாராளமாக. ஆனால் அருகிலுள்ள இடங்களுக்குத்தான் இது பறந்து செல்லும். கால் மைல் தூரம் பறப்பதற்குள் இது கட்டாயம் கீழே இறங்கி ஓய்வு எடுத்துக் கொள்ளும். இதுவரை

அதிக தூரத்துக்கு ஒரு வான்கோழி பறந்துள்ள சாதனை எவ்வளவு தெரியுமா? அரை மைல்.

★பொதுவாக, பண்ணை போன்ற இடங்களில்தான் வான்கோழியை வளர்ப்பார்கள். வீடுகளில் வளர்த்தால் இதன் காட்டுக் கூச்சலைத் தாங்கமுடியாது.

★வான்கோழிகள் மண்ணில் சிறு குழி தோண்டி முட்டையிடுவதும் உண்டு. இரைதேடப்போகும்போது இலை தழைகளை இவற்றின் மீது போட்டு மூடிவிட்டுச் செல்லும்.

★ வருடத்துக்கு 3 அல்லது 4 முறை வான்கோழி முட்டையிடும். ஒரு தடவைக்கு 20 அல்லது 30 முட்டைகள் இடும். இந்த முட்டைகள் 'கிரீம்' கலரில் இருக்கும்.

★மண்ணில் சிதறிக் கிடக்கும் விதைகள், புட்டைகள், புகளியவற்றை வான்கோழி சாப்பிடும். அதே சமயத்தில் வெட்டுக்கிளிகள், பூ பூச்சிகள் கிடைத்தாலும் விட்டு வைப்பதில்லை.

★ஆண் வான்கோழிகள் பெரிதாக இருந்தால் அவற்றின் சாதாரண எடை 22 பவுண்டு; சிறிய ஆண்கோழிகள் 17 பவுண்டு இருக்கும். பெட்டைக் கோழிகளின் எடையோ இதில் பாதி தான்.

★அமெரிக்காவைச் சேர்ந்த 'சிக்னே ஓல்சன்' என்பவர், 1973 டிசம்பரில் வளர்த்துக்கொண்டிருந்த ஒரு வான்கோழியின் எடை 75 பவுண்டு. இதுதான் அதிக எடையுள்ள வான்கோழி என்பது உலக ரிகார்டு.

★முன்பெல்லாம் பிரிட்டனில் வளர்க்கப்பட்ட வான்கோழிகளின் மார்பு மிகவும் சிறியதாக இருக்கும். ஆனால் இப்போது வான்கோழியை வாங்க மார்க்கெட்டுக்கு வரும் பெண்மணிகள் அவற்றின் மார்பு பெரிதாக இருக்கவேண்டும் என்று விரும்புகிறார்கள்; ஆண்கள் கூடத்தான்.

ஒரு மரத்தடியில், கல்லூரி மாணவன் ஒருவனிடம், தன்னை முழுமையாகக் கொடுத்து, சுகம் கண்ட ஒரு கிறிஸ்தவப் பெண் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள்.

அவன் கேட்டான் :

''என்ன ஆயிற்று?''

''இரண்டு முறை செய்த பாவத்திற்கு மன்னிப்புக் கேட்க, நான் எப்படி பாதிரியார் முகத்தில் விழிப்பது?''

''இரண்டு முறையா? — ஒரு முறைதானே....?''

''ஏன், இரண்டாவது முறை, நீங்கள் என்னைப் பாவத்திற்கு ஆளாக்கப் போவதில்லையா?''

— மாலி

# பொய்மான்



பிரதிபா ராஜகோபாலன்

எட்டு மணிக்கு முடியும் என்றிருந்தது, ஆறு மணிக்கே முடிந்து விட்டது. புதிதாய்ச் சேர்ந்திருக்கிற ராமசாமி உதவினான், இல்லை என்றால் எட்டு எட்டரைதான்.

ஒழுங்காக அடுக்கி வைத்த லெட்ஜர்களை மறுபடியும் பிரித்து வைத்துக் கொள்கையில், ராமசாமி வந்தான்.

''சார், பொறப்படலியா?'' என்று ராமசாமி கேட்டான்.

''கொஞ்சம் வேலையிருக்குங்க'' என்றான் அவன்.

''ரிசன்ஸிலியேஷனு?''

''ஆமாங்க''

''நா வேணும்னு, உங்களுக்கு உதவறேன். இங்கே டிரான்ஸ்பர் ஆகறதுக்கு முன்னாடி இந்த வொர்க் தான் பார்த்தேன்'' என்று ராமசாமி தன்னைப் பற்றிச் சொல்லிக் கொண்டான்.

''அந்த ஸீட்லே எத்தனை வருஷம் இருந்திங்க?''

''அஞ்சு வருஷம் சார்''

''அப்படியா ... இப்படி உட்காருங்க ... நீங்க வீட்டுக்குப் போகல்லியா?''

''வீடு எங்க சார்? லாட்ஜ்தான் சார். பேமிலி ஊர்லே இருக்கு'' என்று ராமசாமி சலித்துக் கொண்டான்.

''லாட்ஜ்னு செலவாகுமே? எங்காவது ரூம் பார்த்துக்கலாமே... நம்ம அனந்த பத்மனுபன் வீட்டுக் காம்பௌண்ட்லே ஒரு ரூம் இருக்கு. போறீங்களா? மாசம் இருபது தான்''

''போயிடலாம்... அவரோட வீடு பக்கமா சார்?''

''இத முடிச்சிட்டுப் போகலாம்... எனக்கும் வீட்டிலே மிஸஸ் இல்லே, ஊருக்குப் போயிருக்கா... மெல்லப் போனுப் போதும்...''

''போலாம் சார்... ஃபிகரச் சொல்லுங்க சார். நான் டிக் அடிக்கிறேன், அதற்கப்புறம் டோட்டல் போட்டுடலாம்...''

அரை மணி நேரத்தில் 'டாலி' ஆகிவிட்டது.

''ராமசாமி, உங்களுக்கு மெனி தாங்க்ஸ்... போன மாசம் ஒருநாள் ஆகிப்போச்சு...போலாமா?''

இருவரும் வெளியே வருகையில் மெல்ல இருட்டிவிட்டது. ஆறு மணிக்குள்ளேயே இப்போதெல்லாம் வெளிச்சம் போய்விடுகிறது. தெரு விளக்குகள் பூச்சிகளுக்குக் கண்ணுமூச்சிக் காட்டிக் கொண்டிருந்தன. காற்று நன்றாக இருந்தது.

''ராமசாமி... அனந்த பத்மனுபன் இப்ப வீட்டிலே இருக்கமாட்டான். எட்டு எட்டரைக்குத்தான் வருவான். பார்க்குலே சென்ட்ரல் லைப்ரரி இருக்கே, அங்கேதான் போயிடுவான். அங்கிருந்து நடந்து வந்தாலும் அரை மணி நேரமாகும்.''

''அப்ப டவுன் ஹாலுக்குப் பக்கம் போயிட்டு வரலாமா சார்''?

''நானும் அதத்தான் நினைச்சேன்''

அவன் தன் வேஷ்டியை மடித்துக் கட்டிக் கொண்டான். தோல் பையை வலது பக்கமிருந்து இடது பக்கம் மாற்றிக் கொண்டு, சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டான்.

''எங்கே சாப்பிட றீங்க ராமசாமி?''

''கான்ட்டீன்லேதான் சார்''

''அய்யய்யோ... அங்கேயா சாப்பிடறீங்க? நான் ஒரு வாரம் சாப்பிட்டேன். டாக்டருக்கு அம்பது ரூவா அழுதேன்''

''ஆமாம் சார். எனக்கு இப்பவே வயிறு சரியில்லே. டிசென்ட்ரி மாதிரி போகுது. சில டைம்லே பிளட் வருது...''

''என்னது பிளட் வருதா? பைல்ஸ் இருக்கா? நமக்கெல்லாம் பைல்ஸ் வரதுலே ஆச்சரியமில்லே...''

''நிஜமா சார்...பைல்ஸ்னு கஷ்டமாச்சே... இல்லிங்களா? இப்ப என்ன சார் பண்றது—?''

''என்ன பண்ணலாம்...போற வழிலே நம்ம டாக்டர் இருக்காரு. கன்சல்ட் பண்ணிடலாம்...ஆனு பீஸ் அவர்கிட்ட இருபத்தஞ்சு...நான் வரதுனுலே

இருபது குடுத்தாக்கூட வாங்கிக்குவாரு... உங்ககிட்ட பணமிருக்கா...''

''இருக்கு சார்...முப்பது வச்சிருக்கேன்''

''இல்லாட்டி கூடப் பரவாயில்லே. இதையெல்லாம் உடனே கன்சல்ட் பண்ணிடணும். பணத்துக்கென்ன, எங்கிட்டயும் இருக்கு. நான் தர்றேன். ஒரு பிரண்டுக்கு இதக்கூடச் செய்யாட்டி எப்படி... அதுவும் குடும்பத்த விட்டு, ஊரைவிட்டு ஊர் வந்திருக்கீங்க... ஆமா, எந்த ஊர்னு கேக்கலியே... ராமசாமி, எந்த ஊருங்க நீங்க?''

''பவானி சார்''

''அது நல்ல ஊர்தான். எப்பப் பார்த்தாலும் தண்ணி ஓடிட்டு, வயல் வரப்பெல்லாம் பச்சைப் பசேல்னு இல்லே...''

''ஆமாம் சார்''

''என்னது நம்ம டாக்டர் டிஸ்பென்சரி சாத்தி இருக்கு...எங்காவது வெளியூர் போயிருக்காரா?''

அவன், சாலையைத் தாண்டி, எதிர்ப்பக்கம் அடைந்து, மூடியிருந்த டிஸ்பென்சரியின் பக்கமிருந்த மருந்துக் கடையில் விசாரித்துவிட்டு, மறுபடியும் சாலையைத் தாண்டி பழைய இடத்துக்கு வந்தான்.

''ராமசாமி, டாக்டர் வெளியூருக்குப் போயிருக்கிறாராம். நாளைக்கு வந்திடுவார்...இப்ப என்ன செய்யலாம்...இன்னொரு டாக்டர் இருக்கார்...அவரும் நம்ம பிரண்ட்தான்...மணி இப்ப ஆறே முக்காலாகுது. ஏதாவது சாப்பிடணும் போலிருக்கு...''

''சாப்பிடலாம் சார்...பக்கத்துலே நல்ல ஹோட்டல் இருக்குதா சார்...''

''இங்கே ஒரு இட்டிலிக் கடை இருக்கு. டவுன்லே நல்ல பேரு. சாயந்திரமானா உட்காரச் சீட் கெடைக்காது...''

''போலாம் சார்''.

தோல் பையை அடுத்த கைப் பக்கம் மாற்றிக் கொண்டு, ஒளிவெள்ளமாய் நீண்டு, சந்தடியில் மூழ்கியிருந்த சாலையில் பிளாட்பாரத்தின் ஜனத்திரள்களுக்கு இடிபடாமல் கீழே இறங்கி நடந்து, இட்டிலிக் கடையை அடைந்து, கல்லாவில் நெற்றியில் குங்குமப் பொட்டு இட்டுக் கொண்டிருந்த பனியன் ஆசாமிக்கு வணக்கம் போட்டுவிட்டு, ராமசாமியை உள்ளே அழைத்துக்கொண்டு போனான். உள்ளே இடமில்லை தான்.

"சொன்னேன், பாத்தீங்களா?" என்றவாறு, "உள்ளே வாங்க" என்று ராமசாமியை அழைத்துக் கொண்டு எல்லோரையும் தாண்டி சமையலறையை ஒட்டினாற்போல இருந்த அறையை அடைந்தான்.

உள்ளே இரண்டு மேசைகளும், நாற்காலிகளும், மின் விசிறியும் இருந்தன.

"இது ஸ்பெஷல் ரூம். ரொம்ப வேண்டியவங்களுக்குத்தான் இதப்பயன்படுத்த விடுவாங்க"...

நாற்காலியில் அமர்ந்து கொண்டு, கைப்பக்கம் இருந்த அழைப்பு மணியை அழுத்தினான்.

"கை கழுவிக்குங்க..." என்றவாறு தானும் எழுந்து உள்ளேயே கதவுப் பக்கம் இருந்த வாஷ்பேசினில் முகம் கழுவிக் கொண்டு, தோல் பையிலிருந்த துண்டை எடுத்துத் துடைத்துக்கொண்டு "முருகா முருகா முருகா" என்று மூன்று முறை சொல்லிக் கொண்டான்.

ராமசாமி கை கழுவிக் கொண்டிருக்கையில் சர்வர் வந்தான்.

"என்ன சேகர் சௌக்கியமா?" என்றான் சர்வரை.

"சௌக்கியந்தான் சார்"

"நம்ம பிரண்ட் வந்திருக்கார். ஸ்பெஷலாக் கவனிக்கணும். இட்லி சூடாக் கொண்டு வா. பொடி. நல்லெண்ணெய், பொதினாச் சட்னி இருக்கா. அதையும் கொண்டு வா...தக்காளி ஊத்தப்பம் போட ஆரம்பிச்சாச்சா?"

"உங்களுக்குன்னு, போடச் சொல்றேன் சார்"

"சரி, கொண்டுட்டு வா" என்று சர்வரிடம் சொன்னவன், ராமசாமியைப் பார்த்துக் கேட்டான்.

''ராமசாமி, கல்யாணமாயிடுச்சில்லே... குழந்தைங்க இருக்கா...?''

''ஒரு பையன்...... மிஸஸ் கன்ஸீவ்டா இருக்கா......''

''குட் குட், இது பொண்ணாப் பொறக்கட்டும்; பொண்ணு பொறந்தவுடனே நம்மளைக் கவனிச்சுக்குங்க. சென்ட்ரல் பிரியாணி ஹோட்டலுக்குப் போலாம்...''

''போலாம் சார்''

''நா எப்பவும் சாப்பிடறதுலே செலவு பார்க்கறதில்லே. வயித்துக்குச் சரியாப் போடலீன்னு, இவ்வளவு கஷ்டப்பட்டு என்ன பிரயோஜனம்?''

''வாஸ்தவம் சார்''

சேகர், ஆவி பறக்கும் இட்லித் தட்டுகளுடனும் நாலைந்து பிளேட்டுகளுடனும் வந்தான். தண்ணீர் வைத்துவிட்டு, இலையில் இட்லிகளை, ரொம்ப உபசாரமாக வைத்தான். சட்னி, சாம்பார், குருமா, மசால், பொதினாச் சட்னி, சர்க்கரை ஆகிய துணை அயிட்டங்களைச் சின்னச் சின்ன பிளேட்டுகளில் வைத்தான்.

''பொடி எங்கப்பா!''

''இதோ கொண்டு வர்றேன் சார்''

அவன் போனதும், ''ராமசாமி, பையன் நம்ம பையன், என்னுடைய எண்ணெயா நிப்பான். ம்...சாப்பிடுங்க. ஆறிடும். இங்கே வந்தா கொறஞ்சது பதினஞ்சு, இருபது இட்லி சாப்பிடுவேன். அதுவும் வீட்லே மிஸஸ் இல்லையாச்சே; சாப்பாடும் சரியில்லை. பசியா கபகபங்குது... முப்பது இட்லி சாப்பிடோணும்னு வெறியா இருக்குது. பொதினாவைத் தொட்டுக்குங்க... காரமா இருக்கா... சர்க்கரை பாருங்க, வச்சிருக்கான்...'' என்று சொல்லிக் கொண்டிருக்கையில் சேகர் வந்தான்.

''சார் உங்க பிரண்டு வந்திருக்காரு''

''யாரு, கண்ணபிரானா?''

''அவரு கறுப்பால்ல இருப்பாரு. இவரு செகப்பா ஒயரமா உங்க ஆபீஸ்தானே...''

''அடேடே நம்ம அனந்து ... இங்கே வரச் சொல்லு...''

சேகர் பொடியை வைத்துவிட்டுப் போனான்.

"ராமசாமி, நீங்க அதிர்ஷ்டசாலி...கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தாப்லே ...அனந்த பத்ம நாபனே வந்துட்டான்... ரொம்ப நல்லதாப் போச்சு... அடேடே அனந்து வாப்பா. இப்பத்தா உன்னே நெனச் சோம்...நூறு ஆயுசப்பா...இவர் ராமசாமி நேத்துத்தான் ஜாய்ன் பண்ணியிருக்கார். ராமசாமி இவர் அனந்தபத்ம நாபன். நம்ம சேல்ஸ் டிபார்ட்மெண்ட்லே இருக்காரு... உன்னோட ரூம் இருக்கில்லேயா அதத்தான் நீ யூஸ் பண்ற தில்லேயே...இவருக்குக் குடு... லாட்ஜ்லே பணத்த வேஸ்ட் பண்ணிட்டிருக்காரு... சேகர் அனந்துவுக்கு இலையைப் போடு. உனக்குப் புடிச்ச பொதினாச்சட்னி இருக்குதப்பா..."

"ரூம் தர்றதுலே ஆட்சேபணே இல்லே..."

"தயங்கற?"

"இன்னொருத்தருக்குத் தர்றேன்னு சொல்லி இருக்கேன். அட்வான்ஸ் முப்பது வேணும்னும் சொல்லி இருக்கேன்."

"என்னப்பா நீ, ராமசாமி அம்பது தருவாரு... நீ பேசாமக் குடு. இன்னைக்கு வெள்ளிக் கிழமை. சனி வேண்டாம். ஞாயித்துக் கிழமை வந்திடட்டும்...என்ன?...ராமசாமி, தண்ணி, லைட் பாத் ரூம்னு எல்லா வசதியும் இருக்கு. அப்ப ஞாயித்துக் கிழமையே போயிடுங்க...என்ன? ஆபீசுக்குப் பக்கம்..."

"போயிடறேன் சார். நீங்க பாத்து ஏற்பாடு செஞ்சா நா தட்டவா போறேன்...ரூம் எப்ப சார் பாக்கறது?"

"இப்பத்தா... சாப்பிட்டுப் போட்டுப் போய்ப் பார்க்கலாம். அதுக்குத்தானே உங்க கூடப் பொறப் பிட்டு வந்தேன். அனந்து நீயும் சாப்பிடப்பா... ஓ இன் னும் இலே வரல்லியா?... சேகர் இத்தன நேரமா... போடு போடு... தக்காளி ஊத்தப்பம் ஆச்சா... ராம சாமிக்கு இன்னும் ரெண்டு போடு... இவரு இனிமே நைட் டிபனுக்கு வருவார். கவனிச்சுக்கோ... குருமா ஊத்து, குருமா இன்னிக்கு அட்டகாசமா இருக்கு... அனந்து, லைப்ரரிக்குப் போய்ட்டு வந்தாச்சா?"

"ம் ம்" என்றான் அனந்து; வாயில் இட்டிலி.

சேகர் ஊத்தப்பம் கொண்டு வந்ததும், சாப் பிடுகிற வேகம் இன்னும் அவனுக்கு அதிகமாயிற்று...

அனந்து உளுந்து வடை கொண்டு வரச் சொல்லிச் சாப் பிட்டான். ராமசாமியும் வழக்கத்தைவிட நன்ருக ரசித்துச் சாப்பிட்டான்.

''ராமசாமி, என்ன காபியா, பாலா வேண் டாமா ... பூஸ்ட் சாப்பிடுங்க''

பூஸ்ட் வந்ததும் பில்லுடன் வந்து ''பத்து ரூபாய் குடுங்க சார்'' என்ருன் சேகர். அவன் குரலில் உரிமை அதிகம் இருந்தது. அந்த உரிமை தவிர்க்க முடியாததாக ராமசாமிக்குத் தோன்றியது. பேசாமல் பத்து ரூபாய் கொடுத்தான்.

''ராமசாமி சிகரட் குடிக்கிறீங்களா? வில்ஸ் கிங்'' என்று பரிவுடன் சொன்ஞன் அவன்.

''வேண்டாம்'' என்பதாக ராமசாமி சைகை செய்தான்.

''ஆமா ... இப்பவேண்டாம் ... ஸ்டமக் சரியில்லே. என்னப்பா அனந்து, உனக்கு நம்ம டாக்டர் ஜோசப்பைத் தெரியுமே ... நாளைக்கு நம்ம ராமசாமியை அழைச்சிட்டுப் போப்பா ... ப்ளீஸ், ... ராமசாமிக்கு ஏதாவதுன நமக்கு வந்த மாதிரி...''

''போலாம். நான் சொன்ன நல்லாப் பாப்பார்......''

''நீயெல்லாம் அவருக்கு வலது கை மாதிரி ஆச்சே...இப்ப அந்த செல்வமணி வர்ருளா அவர்கிட்டே...''

''ம்......ம்''

''சரி போலாம். ராமசாமி, அனந்துவோட ரூமைப் பாத்திடலாம். பாத்ததுக்கப்புறம் வேணும்ஞ டவுன்ஹால் பக்கம் போயிட்டுத் திரும்பிடலாம்''

''சரிங்க'' என்ருன் ராமசாமி.

வானம் கருக்கல் கட்டி நட்சத்திரங்களை விழுங்கி விட்டிருந்தது. எந்நேரமும் மழை வரலாம். காற் றின் தழுவலில் குளிர்ச்சி உணரப்பட்டது. நடைபாதைக் காய்கறிக்காரர்கள் கடையை முடிக்க முனைவதில் இருந் தார்கள். பாதசாரிகளது நடைகளின் வேகம் கூடியதாகத் தெரிந்தது.

''என்ன அனந்து, மழை வந்திடுமா?''

''நேத்து இப்படித்தாஇருந்தது. ஆஞ வந்ததா?''

# 4



"அதானே... எதுக்கும் சீக்கிரம் காலெ எட்டி வை''

அனந்தனின் வீட்டை அடையும் வரை யாரும் பேசிக் கொள்ளவில்லை. விறு விறு என்று நடந்ததில் கால்கள் வலித்தன போலிருந்தது.

அனந்து வீடு, ஒரு பெரிய காம்பவுண்டுக்குள் இருந்தது. பத்துப் பன்னிரண்டு தென்னைகள் இருக்கும். வலது பக்க மதில் சுவர் ஓரம் லைன் வீடுகளாய் ஏழெட்டு இருந்தன. எண்ணிப் பார்த்ததில் பத்து என்று தெரிந்தது.

'ராமசாமி, பாத்திங்களா. இத்தன வீடுக இருக்கறப்போ, எதுக்குக் கவலைப்படணும்?... ஆனு நீங்க அதிர்ஷ்டசாலி... அனந்துவோட சொந்த ரூமா இருந்தது உங்களுக்குக் கிடைக்கப் போகுது...'

ராமசாமி சந்தோஷம் கொண்டான். அறை அவனுக்குப் பிடித்திருந்தது. அனந்துவின் கட்டில் மேஜை எல்லாம் உள்ளே இருந்தாலும் உடனே எடுத்து விடுவதாக அனந்து சொன்னான்.

'புடிச்சுதா ராமசாமி?'

'புடிச்சுதுங்க'

'ஆமா நீங்க வெளியூர்னு... எங்கே?'

'பவானி'

''பவானியா? பவானிக்காரர் ஒருத்தர் நம்ம வீட்லே கு, இருக்கார், பாருங்க. இந்தக் கதவு நம்ம போர்ஷனைத் தொட்டாப்லே... பாக்கிறீங்களா, பாருங்க''

ராமசாமி ஒரு ஆவல் மேலிட உள்ளே போய்க் கதவைத் தட்டினான். கதவைத் திறந்தவரைக் கண்டதும் நிஜமாகவே சந்தோஷம் கொண்டான்.

''தம்பி,. நீங்க ராமசாமி தானே... வாங்க''

அவர் சங்கரலிங்கம். அவனுடைய பள்ளி ஆசிரியர். ரிடையராகி இப்போது மகனுடன் தங்கியிருக்கிறார். ராமசாமி, தன் விஷயத்தைச் சொன்னான்.

''அப்படியா? உள்ளாற வாங்க'' என்று அவர் தன் அறைக்கு அழைத்துப் போனார். தன் ஆசிரியர் என்ற முறையில் ஏற்கெனவே இயற்கையாக இருந்த மரியாதை, இந்தச் சூழ்நிலையிலும் தணியாது அவன், அவர் முன்னால் உட்கார மறுத்தான். அவர் புன்னகையுடன் மறுபடியும் உட்காரச் சொன்னதின் அழுத்தத்தில் தயங்கி உட்கார்ந்தான்.

அவர், அவன் குடும்பத்தைப் பற்றியும், உத்தியோகம், கூட படித்த நண்பர்கள், இன்றைய அவர்களின் நிலை பற்றியும் சுருக்கமாக விசாரித்தார்.

அவன், வெளியே மழை தூறத் தொடங்குவதைக் கவனித்தான்.

''இருங்க தம்பி, வெளியே துணிக காயப்போட்டிருந்தது. எடுத்தாச்சான்னு பாத்துட்டு வர்றேன்'' என்றவர், பின் அறைப் பக்கம் போனார். மழையின் மெல்லிய ஒலி தெளிவாகக் கேட்டது.

உள் அறையிலிருந்து பெண் குரல்கள் கேட்டுக் கொண்டிருந்தன. அவன் வந்ததற்கு முன்னாலே உள்ளே பேசிக் கொண்டு இருந்திருக்கலாம். அவன் கவனத்தில் விழவில்லை.

'' இவருக்குப் பொளப்பென்ன ? அதுவும் கூட வந்திருக்குதே அந்த ஆள். இதே பொளப்புதா. எவனாவது கெடச்சா, அதப் பண்றேன் இதப்பண்றேன்னு எதையாவது புளுகறது. அவன் செலவுலே ஓட்டல்லே மூக்குப் புடிக்கத் திங்கறது, அஞ்சு பத்து வாங்கிக்கிறது! இவரோட ரூமத் தர்றேன்னு எத்தனை வாங்கிச்சோ தெரியலே...''

'' ரூமத் தரப் போறீங்களா ?''

'' இல்லேல்லே... ' எனக்கு இஷ்டம் தான்; என் ஓய்ப்புக்குப் புடிக்கலே'ன்னு இவர் வழக்கமாச் சொல்வார். இந்தக் கன்றுவிலே நாம இருக்கணுமான்னு இங்கே வந்திட்டேன்... ''

ராமசாமி, தன் நெஞ்சு கனப்பதாக உணர்ந்தான். மெல்ல எழுந்து ஜன்னலைத் திறந்தான். மழை பலத்திருந்தது. போனவன் வரவில்லை என்று அனந்து உள்ளே வந்தான்.

''ராமசாமி, இந்தப் பொம்பளைங்க மோசங்க; ரூம் தந்துடலாம், வாடகையாவது வரும், ஸ்கூல் பீஸுக்காவது ஆகும்னு சொன்ன என் மிஸஸ், இப்ப வேணாங்கிறு...எனக்கு என்ன பதில் சொல்றதுன்னே புரியலே...''

''பரவாயில்லே சார்'' என்றான் ராமசாமி; அனந்துவைப் பார்க்காமல் வெளியே பெரியதாய்த் துவங்கிவிட்ட மழையைப் பார்த்துக் கொண்டு... ★

# சிவசங்கரியின் தப்புக்கணக்கு



## கடிதங்கள்

சிறந்த கதையைத் தான் சிவசங்கரி தருவார் என்று நாங்கள் போட்ட கணக்கு தப்பாகவில்லை.

பொ. ஜெயபாலன்,
திருச்சி-8.

"கொடூரமான சிந்தனைகளுக்கு இடம் கொடுத்து உன்னையே அழித்துக் கொண்ட ஆத்மாவே! உன் ஆத்மா நூறு யுகங்கள் சென்றாலும் சாந்தி அடையாது."

கே. சேகர்,
விழுப்புரம்.

கதையின் முடிவைப் படித்தபோது, நெஞ்சில் ஏதோ ஒன்று அடைத்துக் கொள்வது போல் ஓர் உணர்வு. இன்னும் அதிலிருந்து மீள முடியவில்லை.

இமயன்,
பெங்களூர்.

பட்டுக் கத்தரித்தது போன்ற 'நடை' — சிவசங்கரிக்குக் கைவந்த கலை. பாராட்டுக்கள்,

எம். எஸ். தியாகராசன்,
பழவந்தாங்கல்.

ஆரம்பத்திலிருந்து இறுதி வரை ஒரே மூச்சில் படித்து விட்டேன்; கதை — அவ்வளவு அருமை.

பாரதமணி,
ராசிபுரம்.

'தப்புக்கணக்கை' ஆவலுடன் படிக்கத் தொடங்கினேன்...... கதையின் நோக்கமும் முடிவும்...... இது, சிவசங்கரி எழுதிய கதை தானா என்ற சந்தேகம் எழுகிறதே!

சாவித்திரி ஞானகிராமன்,
சென்னை 87.

பெண்மையின் பலவீனத்தை ஒரு பெண்ணே சித்தரிப்பது சிறப்பு

லெனின்,
திருவாரூர்.

பக்கம் 81-ல் திரௌபதி உவமை விளக்கப்பட்டு இருக்கிறதே, அது எத்தனை பேரைக் கெடுக்கப் போகிறதோ?

'ஒரு போலீஸ்
இன்ஸ்பெக்டர்'

பாவம் ஆத்மா. மனசாட்சிக்கு மதிப்பளித்தது அவன் தனது முடிவைத் தேடிக் கொண்ட விதம் மகோன்னதம்.

நே. பிரதாப்சிங்,
அரகண்டநல்லூர்.

